Registered No. M. 2330

'SIDDHANTHAM'
Vol. 22—No. 12

# சித்தாந்தம்

சைவசித்தாந்த மகாசமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

1949

மலர் 22 | விரோதி மார்கழி டிசம்பர் 1949 | இதழ் 12



உள்ளுறை



பத்திராசிரியர்: சி. எம். இராமச்சந்திரன் செட்டியார், பி. ஏ., பி. எல்.

உதவிப் பத்திராசிரியர்: ஆர். சண்முகசுந்தரம் செட்டியார்

சைவ சித்தாந்த மகா சமாஜம்
40, முத்தையா முதலி தெரு, வேளாளதேனும்பேட்டை, சென்னை-6

# "சித்தாந்தம்" வி. பி. அறிக்கை

1. "சித்தாந்தம் இருபத்திரண்டாவது மலர் இவ்விதழோடு முடிவடையும். ஜனவரி௴ முதல் 23-வது மலர் தொடங்கும். 23-வது மலரின் கையொப்பத் தொகை ரூபா மூன்றையும் ஒவ்வொருவரும் 1949௵ டிசம்பர்௴ 31உக்குள் மகாசமாஜ காரிய தரிசிக்குக் கிடைக்கும்படி மணியார்டர் செய்துவிட வேண்டும். தனித்தனியோ அல்லது ஒரே ஊரிலிருக்கும் பல சந்தாதாரர்கள் சந்தாத் தொகையைச் சேர்த்தோ அனுப்பும்போது மணியார்டர் கூப்பனிலாவது தனியே கார்டு மூலமாவது தங்கள் பெயர், விலாசம், சந்தா எண் முதலிய விவரங்களைத் தெளிவாக எழுதித் தெரிவிக்கவேண்டும்.

2. 1949௵ டிசம்பர் 31உக்குள் 23-வது மலரின் கையொப்பத் தொகையைச் செலுத்தாத சந்தாதாரர்கட்கு அம்மலரின் முதல் இதழ் வி. பி. மூலம் அனுப்பப்படும். அவ்வாறு வி. பி. அனுப்பிப் பெற்றுக் கொள்வதனால் ஒவ்வொரு சந்தாதாரருக்கும் வி. பி. ரிஜிஸ்தர் தபாற்கூலி வீண் நஷ்டமாகும்.

3. சில நண்பர்கள் வி. பி. வருங்காலத்தில் பெற்றுக்கொள்ளாது மற்றொருமுறை வரும்படியாகத் தபாற்காரனுக்கு அறிவித்து விடுகிறார்கள். பிறகு தபாற்காரன் வி. பி. யைச் சில நாள் வைத்திருந்து "not claimed" (வேண்டப் படவில்லை) என்று குறித்து சமாஜத்துக்குத் திருப்பி விடுகிறான். இதனால் சமாஜத்துக்கு வி. பி. செலவு நஷ்டமாகிறது. இவ்வாறு வி. பி. திருப்பப்பட்ட சில நாட்களுக்குள் அந்த வி. பி. யைப் பெறவேண்டிய சந்தாதாரர் தாம் ஏதோ காரணம் சொல்லி மீண்டும் பத்திரிகையை அனுப்பும்படி கடிதம் எழுதுவது வழக்கமாக இருக்கிறது.

4. ஆகையால் அன்பர்கள் தயைசெய்து சமாஜத்துக்கு வீண் கஷ்டமும் நஷ்டமும் தராமல் அடுத்த மலருக்குரிய கையொப்பத்தை முன்னதாகவே அனுப்பி வைப்பது பேருபகாரமாகும் என்று நமது சந்தா நேயர்களுக்கு அறிவிக்கிறோம்.

5. பணம் அனுப்பும் ஒவ்வொருவரும் தமது முழுப்பெயர், விலாசம், சந்தா எண் ஆகிய விவரங்களைத் தெரிவித்தல் அவசியமாகும்.

6. இவ்வாண்டு பத்திரிகையைத் தருவிக்கும் ஒவ்வொரு நேயரும் புதிதாகப் பல சந்தாதாரரைச் சேர்த்துத் தரல் வேண்டுகிறோம். அல்லது ஒரு சந்தாதாரரையேனும் அடுத்த ஆண்டுக்குச் சேர்த்து அவர் கையொப்பத்தையும் சந்தா தொகையையும்

1/6

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

சென்னைச் சைவ சித்தாந்த மகாசமாஜம்

## 44-வது ஆண்டு நிறைவு விழா — கொழும்பு

# சைவர் மாநாடு

"வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமரன் நாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே"

பேரன்புடையீர்,

நிகழும் விரோதி ஆண்டு மார்கழித்திங்கள் உங, உச, உரு (சனி, ஞாயிறு, திங்கள்) நாட்களில் (1950 ஜனவரி 7, 8, 9 தேதிகள்) சென்னைச் சைவ சித்தாந்த மகாசமாஜத்தின் 44-வது ஆண்டு நிறைவு விழாவும், சைவர் மாநாடும், கொழும்பில், கொழும்பு விவேகானந்த சபை மண்டபத்திலும், வெள்ளவத்தை - மாணிக்கப் பிள்ளையார் கோயில் மண்டபத்திலும் பின்வரும் நிகழ்ச்சிமுறைப்படி நடைபெறும்.

அவ்வமயம் முன்பு அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பகுதிக்குத் தலைவராயிருந்த பன்மொழிப் புலவர் உயர்திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரம், M. A., B. L., M. O. L., அவர்கள் தலைமை வகிப்பார்கள்.

இலங்கை உணவுப் பகுதிக் கமிஷனர் திரு. K. ஆழ்வாப் பிள்ளை, O. B. E., B. A., (Lond.) C.C.S., அவர்கள் இளைஞர் மாநாட்டில் தலைமை வகிப்பார்கள்.

கொழும்பு, பண்டிதை திருமதி. இ. பத்மாசனி அம்மையார் அவர்கள் சைவ மங்கையர் மாநாட்டில் தலைமை வகிப்பார்கள்.

மேலே கண்ட நிகழ்ச்சிகளுக்கு முறையே கொழும்பு விவேகானந்த சபைத் தலைவரும், இலங்கைக் கல்வி மந்திரியின் பாராளுமன்றக் காரியதரிசியுமாகிய திரு. க. கனக

ரத்தினம், M. P. அவர்கள், திரு. கே. எஸ். பழனிவேல் அவர்கள், கொழும்பு சைவ மகளிர் கழகக் காரியதரிசி திருமதி. ந. சொர்ணகாந்த அம்மையார் அவர்கள் வரவேற்புத் தலைவர்களாக இருப்பார்கள்.

தங்கள் சபையினரோடும், வாழ்க்கைத் துணைவியர், மக்கள், உறவினரோடும் வந்திருந்து மாநாட்டைச் சிறப்பிக்கும் வண்ணம் தங்களை அனபுடன் வேண்டிக் கொள்ளுகிறோம்.

**இ. பொன்னம்பலம்,**
விவேகானந்த சபை வரவேற்புச் செயலாளர்

**க. அரங்கசாமி,**
சமாஜப் பொதுச் செயலாளர்

---

## நிகழ்ச்சி முறை

**விரோதி௵ மார்கழி௴ ௨௩௨ (7-1-50) சனிக்கிழமை**

**சைவர் மாநாடு**

| | | |
|---|---|---|
| முற்பகல் | 6-30—7-15 | திருக்கோயில் வழிபாடு. |
| | 7-15—8 | ஊர்வலம். |
| | 8 —8-15 | கொடியேற்றம். |
| பிற்பகல் | 2-30—2-45 | தலைவர் வரவேற்பு. |
| | 2-45—3 | ஆண்டறிக்கை வாசித்தல். |
| | 3 —4 | மாநாட்டுத் தலைமைப் பேருரை. |
| | 4 —4-50 | கொழும்பு, மஹாரகம அரசினர் ஆசிரியர் பயிற்சிக் கழகத் தமிழ் விரிவுரையாளர் டாக்டர் V. பொன்னையா, B.A.(Hons); Ph. D., அவர்கள்—"சைவ சித்தாந்தம் நுதலும் நுண்பொருள்" |
| | 4-50—5-45 | அண்ணாமலைநகர் உயர்தரப் பாடசாலைத் தலைமை ஆசிரியர் பு. ர. சுவாமிநாதன், M. A., L. T. அவர்கள்—"சமயமும் அரசியலும்" |
| | 5-45—6-35 | கொழும்பு மஹாரகம அரசினர் ஆசிரியர் பயிற்சிக் கழகத்திலுள்ள திரு. N. சண்முகரெத்தினம், B. A., அவர்கள்—"சமய ஒப்பியல்" |

6-35—7-30 அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்க்கலை ஆராய்ச்சியாளர்-வித்துவான் க. வெள்ளை வராணர் அவர்கள்—" சங்ககாலச் சைவ வழிபாடு"

7-30—8-20 வல்வை சிதம்பர வித்தியாலய ஆசிரியர் S. நமசிவாயம் பிள்ளை அவர்கள் — " இறைவனோ டிசைந்த வாழ்வு "

## மார்கழிமீ உசஉ (8-1-50) ஞாயிற்றுக்கிழமை

### சைவ இளைஞர் மாநாடு

முற்பகல் 8-30— 8-45 தலைவர் வரவேற்பு.

8-45— 9-30 தலைமைப் பேருரை.

9-30—10-25 ஸ்ரீவில்லிபுத்தூர் தாசில்தார் G. கலியாணம், M. A., Dip. Eco., அவர்கள்—"திருக்குறளில் சமயம்"

10-25—11-15 கொழும்பு வித்தியாதரிசி A. V. மயில்வாகனம், B. A., B. Sc., அவர்கள்—" சைவ சமயம் "

11-15—12-10 அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்க்கலை ஆராய்ச்சியாளர் - வித்துவான் - ஔவை. சு. துரைசாமி அவர்கள்—"சிவஞானம்"

12-10—1 யாழ்ப்பாணம் பரமேஸ்வரக் கல்லூரித் தமிழ் விரிவுரையாளர் - வித்துவான் - பண்டிதர் - புலவர் - திரு. க. வேந்தனார் அவர்கள் — " தென்னாடுடைய சிவன் "

### சைவ மங்கையர் மாநாடு

பிற்பகல் 4 —4-15 தலைவர் வரவேற்பு.

4-15—5 தலைமைப் பேருரை.

5 —5-45 யாழ்ப்பாணம் இராமநாதன் கல்லூரிப் பண்டிதை - திருமதி. ச. அமிர்தாம்பிகை, B. A. (Hons.) — " கந்தபுராணக் கவி நயம் "

5-45—6-30 சென்னை லேடி வெலிங்டன் ஆசிரியை பயிற்சிக் கல்லூரி விஞ்ஞானப் பேராசிரியை திருமதி. E. T. இராஜேஸ்வரி அம்மையார்—'சமயமும் விஞ்ஞானமும்'

6-30—7-15 சென்னை பச்சையப்பன் கல்லூரித் தத்துவ விரிவுரையாளர் டாக்டர் வ. ஆ. தேவ சேனபதி, Ph. D., அவர்கள்—"சைவ சித்தாந்தத்தின் நுட்பங்கள்"

7-15—8 சித்தாந்த ஆசிரியர் உயர் திரு. C.M. இராமச்சந்திரன் செட்டியார B. A., B. L. அவர்கள் "சைவ சமயத்தின் சமரசம்"

மார்கழி 25உ (9-1-50) திங்கட்கிழமை

காலை 8 —9 சமாஜச் செயற் கூட்டம்.

சைவர் மாநாடு

பிற்பகல் 4-30—5-15 கொழும்பு திரு. K. V. S. சுந்தரம் அவர்கள் —"சைவத்தின் மாண்பு"

5-15—6 சென்னை பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் M. வரதராசன், M. O. L. Ph. D., அவர்கள்—"சமயமும் வாழ்க்கையும்"

6 —6-45 சென்னை பச்சையப்பன் கல்லூரித் தமிழ் விரிவுரையாளர் அ. மு. பரமசிவானந்தம், B. O. L., M. Litt., அவர்கள்—"சமயமும் சமூகமும்"

6-45—7-45 தீர்மானங்கள்.

7-45—8-30 கொழும்பு அரசினர் ஆசிரியர் பயிற்சிக் கழகத் தமிழ்ப் போதகாசிரியர் - வித்துவான் - பண்டிதர் - திரு. K. P. இரத்தினம், B.A. (Hons.), அவர்கள்—'தாவாரம் இல்லை தனக்கொரு வீடு இல்லை'

8-30—9 தலைவர் முடிவுரை, நன்றி கூறல்.

## குறிப்புக்கள்

1. பெண்களுக்குத் தனி இடம் உண்டு.
2. தகுந்த காரணங்களுக்காக நிகழ்ச்சிமுறைகள் மாற்றப்படும்.
3. சொற்பொழிவுகளில் முதலிடைகடைகளில் தமிழ்மறை ஓதப்பெறும்.
4. சமாஜச் செயற் கூட்டத்திற்கு வாக்குரிமை பெற்ற அங்கத்தினர்கள் மட்டும் வரலாம்.
5. மாநாட்டில் சமாஜ வெளியீடுகள் விற்கப்படும்.
6. மற்ற விவரங்களுக்குச் செயலாளருக்கு எழுதிக்கொள்ளலாம்.

சாது அச்சுக்கூடம், சென்னை — 800

Reg. M. 2330

உ

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியையுள் நாடு

மலர் 22 | விரோதி மார்கழி 1949 டிசம்பர் | இதழ் 12

## ஒலிபரப்பு

சமயப்பரப்பு : பன்னிரண்டு பதின்மூன்று நூற்றாண்டுகளுக்கு முந்தி தமிழ்நாட்டில் சைவ சமயாசாரியர்கள் தோன்றி சைவ சமயத்தை நம்நாடுகள் எங்கும் பரப்பினார்கள். மக்களைத் தூய்மைப்படுத்திச் சமய வாழ்க்கையில் ஈடுபடுத்தினார்கள். அவர்கள் ஊன்றிய சைவ விதைதான் நன்றாகப் பயிராகி வளர்ந்து இதுகாறும் பலன் தந்துகொண்டிருக்கிறது. அப்பயிருக்கு இடைக்காலத்தில் எத்தனையோ இடையூறுகள் நேர்ந்தன. வெளிநாடுகளிலிருந்து வந்த பரசமயப் புயல்காற்றுகளும் உள்நாட்டிலிருந்து முளைத்த அவநம்பிக்கைக் களைகளும் எத்தனைச் சீர்கேடு செய்ய முயன்றும் அச்சமயப்பயிர் அழியவில்லை. இன்னும் வளர்ந்து பலன் தந்துகொண்டேயிருக்கிறது.

அப்பெரியார்கள் சமய வளர்ச்சியைக் கருதி நாடெங்கும் சுற்றி சமய நிலையங்களை நிறுவினார்கள். அந்நிலையங்களில் தூய்மை படருவதற்கு செந்தமிழ்ப் பாக்களை அருளிச்செய்தார்கள். இறைவனைத் துதிப்பதற்கு அவரவர்கள் மொழியே சாலச் சிறந்தது எனத் தாமாகவே காட்டினார்கள். இவ்வாறு அவர்களால் பாடப்பெற்ற தலங்கள் தமிழ்நாடெங்கும் புகழ்பெற்று விளங்கின.

அவ்விதத் தலங்கள் இருவகைப் பெருமைபெற்றன. முழுப்பாடல் பெற்றவைகள் பாடல் பெற்ற தலங்கள்

என்றும், பெயர் மட்டும் குறித்தவைகள் வைப்புத்தலங்கள் என்றும் புகழ்பெற்றன. இவ்வாறு புகழ்பெற்ற தலங்கள் பல மண்டலங்களிலும் நிறுவின. அவைகள் மண்டல வரிசையாக எடுத்தும் ஆளப்பெற்றன. அம்மண்டலங்கள் சோழ, பாண்டிய, தொண்டை; கொங்கு, துளு, சேர, ஈழ, வடநாடுகள் என்ற 9 பாகுபாடுகள் அடைந்து பெருமை பெற்றன.

2. ஈழமண்டலத்தில் சைவம்: அவ்வாறு சைவ சமயத்தை நால்வர்களும் பரப்பின மண்டலங்களில் ஈழ மண்டலமும் ஒன்று. ஈழமண்டலம் மிகச் செழிப்பான தீவு. நாற்புறங்களிலும் கடலால் சூழ்ந்த வகையில் அதிகச் சூடும் அதிகக் குளிரும் இல்லாத நடுநிலையான வெப்ப தட்பம் பெற்றது. தவறாது மழை பெய்வதினால் விளைவு செழிப்பாக நிலவுவது. காடடர்ந்த சோலைகளில்எண்ணிறந்த அருவிகள் பாய்வதினால் இயற்கையன்னை தாண்டவம் ஆடும் பெற்றியுடையது. அப்படிப்பட்ட நாட்டில் சென்ற இரண்டாயிரத்துஐநூறு ஆண்டுகளுக்கு முன்பிருந்தே தமிழர்கள் தென்னாட்டிலிருந்து குடியேறி வடபகுதி முழுதும்செழித்திருந்தார்கள். அவ்வாறு குடியேறிய காலங்களில் தென்னிந்தியாவிலிருந்த பல பண்டை வழக்கங்களையும் தம்முடனே அணைத்துக்கொண்டு சென்றிருக்கவேண்டும். அந்த வகையிலே ஊர்த்தேவதைகளின் வணக்கம், அதன்போது ஊன் படைத்தல், மது உண்ணல், வெறியாடல் முதலிய வழக்கங்களும் சென்றிருக்கவேண்டும். ஏனெனில் இவ்வழக்கங்கள் பண்டைக்காலத்திலும் தென்னாட்டில் இழி மக்களிடை இருந்தன என்பதற்குச் சங்கநூல்கள் சில சான்றுகளைக் கூறுகின்றன. அவ்வாறு வேண்டத்தகாத பழக்கங்கள் நாட்டில் பெருகிவந்த காலத்தில்தான் சைவசமயாசிரியர்கள் தோன்றித் தூய்மை ஒழுக்கமும் உயர்வு வணக்கமும் நிலவினார்கள். அப்போது தென்னாட்டில் அவர்கள் செய்துவைத்ததுபோல ஈழநாட்டிலும் துவக்கி வைத்தார்கள். அவ்வாறு துவக்கி வைத்ததன் பயனாகத்தான் நமக்கு ஈழநாட்டில் திருக்கேதீச்சரம், திருக்கோணமலை என்ற இரண்டு பாடல்பெற்ற தலங்

களும் அவற்றைப் பற்றிப் பாடியருளிய தேவாரப்பதிகங் களும் கிடைத்திருக்கின்றன. அதனைப் பின்பற்றிச் சைவம் பரவினதென்பதற்குச் சான்றுகளாக ஆறுமுகக் கடவுள் கோயில்களும் கணக்கற்ற வேறு சிறு ஆலயங்களும் ஏற் பட்டுள்ளன. இந்த வகையில் ஈழமண்டலத்தில் சைவம் பெருகிற்று.

3. நடுக்காலத்தில் சமய நிலைமை : ஈழநாட்டில் பதின் மூன்று நூற்றாண்டுகளுக்கு முந்தி சைவப் பெருங்குரவர் கள் செலுத்தின சைவப் பிரசாரம் பின்னால் சோழ அரசர் களால் பெருக்கப்பட்டது. ஒன்பது நூற்றாண்டுகளின்முன் இராசராசச் சோழனும் அவன் புகழ்பெற்ற மகன் கங்கை கொண்ட சோழனும் ஈழநாட்டை முழுதும் பிடித்துத் தம் ஆட்சிக்குக் கொண்டுவந்தார்கள். சோழநாட்டில் சைவத் தைப் பெருக்கினாற்போல ஈழநாட்டிலும் பெருக்கினார்கள். அப்பெரு மன்னர்களே தஞ்சையில் பெருவாவுடையார் கோயிலையும் காவிரிக்கு வடபால் கங்கைகொண்ட சோழேச் சாத்தையும் கட்டி இணையற்ற தொழுகைத்திட்டங்களை ஏற் படுத்தியவர்கள். ஆகவே, ஈழநாட்டுத் தலைநகராகிய பொலந் நருவையில் (புலனரி) அருமையான சிவாலயத்தைக் கட்டி னார்கள். அதில் தாபித்த அருமையான செப்புப்படிமங்கள் இந்த நாளிலும் கொழும்புக் காட்சிச்சாலையை அலங்கரிக் கின்றன. சைவம் பரப்பின நால்வர்களின் திருவுருவங் களும் அவர்களால் தாபிக்கப்பெற்றன. ஆகவே அந்த வகையிலும் சைவம் போற்றப்பட்டது. நால்வர்களின் திருவுருவங்களை எப்போது தாபிக்கப்பெற்றனவோ அப் போதே அவர்களுடைய அருள் வாக்குகளும் சென்றிருக் கும் அல்லவா ? அப்படி தாபித்துப் பரப்பின சைவம் பல நூற்றாண்டுகள் நின்று விளங்கின. ஈழத்தின் தென்பகுதி யில் பௌத்த சமயம் மீண்டும் ஓங்கி வந்தது. ஆனால் வட பகுதியில் சைவமே ஓங்கியிருந்தது. பதினைந்தாம் நூற் றாண்டில் பறங்கிக்காரர்கள் சூறையடித்த நாள்வரையில் பழைய ஆலயங்கள் நன்றாக விளங்கின. பறங்கியால் திருக்கோணமலை முதலிய தலங்கள் அழிவுற்றன. சைவர்

களும் வெளிப்படையாகக் கிறிஸ்தவப் பெயர்களை வைத்துக் கொண்டார்கள். இந்த வகையில் சில நூற்றூண்டுகள் சைவம் மழுங்கிக் கிடந்தது.

4 **ஈழத்தில் சைவம்** : ஈழநாட்டில் சைவமணம் பரிமளிக்கிறது என்றுதான் பொதுவாக நாம் எண்ணியிருப்பது. ஏனெனில் அது ஆறுமுக நாவலர் நாடு அல்லவா என்பதே எங்கள் கருத்து. என்றூலும் அடியிற்கண்ட புள்ளி விவரங்கள் என்ன சொல்லுகின்றன என்று ஆராய்வோம். 1946 ல் இலங்கையில் மக்கள் தொகை 6,658,000 பேர் அதில் வடமாகாணத்தில் 398,874 பேரும் கீழ்மாகாணத்தில் 212,421 பேரும் ஆகமொத்தம் 611,295 பேர் தமிழ் பேசும் மாகாணங்களில் உள்ளவர்கள். அதாவது 10 ல் ஒருவர். இலங்கை முழுவதும் கணக்கெடுத்தில் தமிழர்களில், இலங்கையர் 826,000 பேரும், இந்தியர் 682000 பேரும், ஆக 15,08,000 பேரும் இருக்கின்றூர்கள். அதாவது 4 ல் ஒருவர். ஆகவே 9 லட்சம் பேர் வேறு மாகாணங்களில் உள்ளனர் எனலாம். இவர்களிலே இந்துக்கள் 1,326,000 பேர். இவர்கள் எல்லாரும் தமிழர்கள் என்க. மற்ற 2 லட்சம் கிறிஸ்தவர்கள் முதலியவர்களாக இருக்கவேண்டும். இலங்கையில் மொத்தம் முசுலிமியர்கள் 433,000 பேர். இவர்களில் பாதியாவது தமிழ் பேசுபவர்கள். இலங்கையில் கிறிஸ்தவர்கள் 606,000 பேர். பத்தில் ஒருவர் ஈழநாட்டுத் தமிழர்கள். எல்லாரும் சைவர்கள். கோயில்களும் பெரும்பாலும் சைவக்கோயில்களே. இந்தியாவிலிருந்து சென்றவர்கள் பெரும்பாலும் கூலிகளே. இவர்களிலே மிகுதியான பேர்கள் அரிசனங்கள். இவர்களுக்குச் சைவமும் வைணவமும் சமயங்களாக இருக்கலாம். ஆனுல் அவர்கள் பெரும்பாலும் சமயத்தில் ஈடுபடாதவர்களாகவே இருப்பார்கள். திருநாள் சமயங்களிலே மட்டும் சமயவாசனை பெறுவார்கள். அதுவும் கிராம தேவதை வழிபாடுதான் இருக்கும். சீரிய சைவம் அறிந்து போற்றுகிறவர்கள் வெகு குறைவென்றே கூற முடியும்.

5. சமயப்பற்று குறைந்துபோனதன் காரணங்கள் : சமயக்குரவர்கள் வெளியிட்டுள்ள கோட்பாடுகள் மிகத் தூய்மையானவை. அவர்கள் எடுத்தாண்ட முறைகளும் நல்லவைகளே. ஆனல் ஆண்டுகள் செல்லச்செல்ல பல புது சடங்குகள் நடவடிக்கைகளில் புகுந்துகொள்ளுகின்றன. அவைகள் நாளாவட்டத்தில் சமயக்கொள்கைகளுக்கு மீறிச் செல்லுகின்றன. சமயம் மக்களுக்குத் தரக்கூடிய ஆறுதல் களேயே அவைகள் மறுக்கின்றன. அச்சடங்குகள் பெரும் பாலும் சமயத்தை பிழைப்புக்கு ஒரு வழியாக வைத்துக் கொள்ளும் மக்களாலே உண்டாக்கப்படுகின்றன. அவைகள் பொதுமக்களுக்குக் கேடு விளைவித்தாலும் அவைகளை வற் படுத்தியவர்கள் விட்டுக்கொடுப்பதில்லை. இந்த வகையில் குறைவுகள் பெருகி சமயத்தில் மக்களுக்கு இருந்த ஆர்வம் மறைகிறது. காலப்போக்கிற்கும் பகுத்தறிவுக்கும் தக்க வாறு சடங்குகளை மாற்றிக்கொள்வதே அறிவிற்கு அழகா கும். 'பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல' என்பதை மக்கள் அறிந்துகொள்ளவேண்டும். இந்தியா விலும் இந்தக் குறைவுகள் ஏற்பட்டன. அவைகளை அறிந்த அரசியல் துறையார்கள் அவைகளைச் சீர்திருத் தினர்கள். இந்த வகையிலே சமயத்திற்கு ஏற்பட்ட சீரழிவு இப்போது நின்றுவிட்டது. நூறுயிரக்கணக்காக சமயத்தை விட்டு அயல் சமயங்களுக்கு மாற்றிக்கொண்டிருந்த மக்கள் இப்போது போவதை நிறுத்திக்கொண்டார்கள். ஆனல் இலங்கையிலே இன்னமும் அக்குறைகள் இருக்கின்றன. அவைகளை நீக்கவேண்டியது அவசியம் அல்லவா ? அதற்கு இலங்கை அறிஞர்கள் என்ன சொல்கிறர்கள்.

6. சீர்திருத்தங்கள் எவை : குறைவுகள் முக்கியமாக சமய நிலையங்களில்தான் உண்டு. அந்நிலையங்களைச் சீர் திருத்தினல் சமயத்தில் உண்மைப் பற்று மக்களுக்கு ஏற் பட்டுவிடும். தென்னிந்தியாவில் என்ன செய்தார்கள் ?

1. ஆலய நிர்வாகத்தைப் பரம்பரை பாத்தியதையிலி ருந்து விடுவித்து மக்களிடம் ஒப்புவித்தார்கள். அரசியலார் ஒரு பகுதி ஏற்படுத்தி அதன்மூலம் அறக்காப்பாளர்களை

நியமித்துப் பரிபாலனத்தைத் தூய்மையாக்கினுர்கள். இதனுல் வீண் விரயங்கள் குறைந்தன. வரவு செலவுக் கணக்குகளை ஒழுங்குபடுத்தினுர்கள். கணக்கு, பரிசோதனைக்கு உட்படுத்தப்பட்டது. மீதிப்பணத்தை சமயப்பிரசாரத்திற்கும் மக்களுடைய நலத்திற்கும் செலவழிக்க அடிகோலினுர்கள்.

2. சமயத்தின்பேரால் நடக்கும் பல கெட்ட பழக்கங்களை நிறுத்தினுர்கள். உடலில் அலகு குத்திக்கொள்ளுதல் தேர் இழுத்தல் முதலிய சமய நூல்களில் கூறப்படாத பழக்க வழக்கங்களை நிறுத்தினுர்கள். கோயில்களில் விபசாரம் செய்யும் தேவடியார்களைத் தொலைத்தார்கள்.

3. சிறு தேவதைகளின் கோயில்களிலே உயிர்ப்பலியிடுதலை நிறுத்தினுர்கள் நாட்டின் நலத்திற்காக இருக்கும் ஆயிரக்கணக்கான ஆடு, கோழி முதலியவைகளை அறுத்து இரத்தம் சொட்டும் வழக்கத்தை நிறுத்தினுர்கள். இவை முதலான சீர்திருத்தங்களைச் சமயநிலையங்களில் செய்யவே நாடெங்கும் மக்கள் மறுமலர்ச்சி உண்டாகி இருக்கிறது. சமயம் விட்டுச்சென்ற மக்களும் திரும்பி வரப்பார்க்கிருர்கள். இந்தச் சீர்திருத்தங்கள் ஈழநாட்டிற்கு வேண்டாமா?

7. **கோயில் நுழைவு முதலியன :** ஈழநாட்டிலே ஆலயங்கள் இதுவரையில் பரம்பரை அறக்காப்பாளர் கைக்குள் சிக்கன சிறைக்கோட்டங்களாக இருக்கின்றன. பொது மக்களுக்குக் கணக்கு கேட்க உரிமை இல்லை. மேல்அதிகாரிகள் பார்வை இல்லை. கல்வியிலும் சமய ஞானத்திலும் தேர்ந்தவர்களுடைய ஆளுகைக்கு இன்னமும் வரவில்லை. சமயம் எல்லா மக்களுக்கும் பொதுவாக இருந்தபோதிலும் சமய நிலையங்கள் சில குறிப்பிட்ட மக்களின் ஈடேற்றத்திற்கே பயன்படுகின்றன. ஏழைமக்கள் உள்ளே செல்ல முடியாது. அதற்கு வழக்கம் எதிர்த்து நிற்கிறதாம். ஆகவே, அவர்கள் வெளியே செல்லுகிருர்கள். உலகத்திலேயே சிறந்த ஒப்பற்ற கோட்பாடுகளைக் கொண்ட சைவம் சில உயிர்களுக்கு மட்டும் ஏற்பட்டதா? இதனை கருணை வள்ளலான கடவுள் அனுமதிப்பாரா? இதனை ஆராயாது பரம்பரையினருக்குத் தனி உரிமைகள் வழங்கப்படுகின்றன.

இவை போகவேண்டும். மேன்மை உற்றவர்களுக்குச் சமய நிலையங்கள் அவசியமில்லை. மேன்மையுறுமல் தாழ்ந்தவர் களுக்கே சமய நிலையங்கள் மிகவும் வேண்டும். ஆகவே இந்தியாவில் ஏற்பட்டிருக்கும் கோயில் நுழைவு ஈழத்திற்கும் அவசியம் வேண்டும். ஆனுல் அதனுல் தூய்மை விட்டுவிட வேண்டும் என்பதல்ல. தூய்மையை ஒருக்காலமும் விடக் கூடாது. கோயிலுக்குள் சென்ருல் அறிவற்றவனும் வணங் கக்கூடிய நல்ல நிலைமையில் கோயில் இருக்கவேண்டும். இதுவே விரும்பத்தக்கது. தென்னுட்டில் ஏற்பட்டுள்ள நுழைவுவிதிகளை ஈழத்துமக்கள் அறிந்துபாராட்டுவார்களாக.

8. பழக்க வழக்கங்கள் : ஈழத்தில் நடைபெறும் திரு விழாக்களிலே அனுவசியமாக ஆடம்பரங்கள் பாட்டுக் கச்சேரிகள்; நாகசுரங்கள் நர்த்தனங்கள் முதலியவை நடை பெறுகின்றன. இவைகளை அறவே ஒழித்துச் சமயப் பிரசார சொற்பொழிவுகள் தேவார பாராயணம் முதலிவை களை ஏற்படுத்துதல் மேன்மையதாம். சில கிராமங்களில் அலகு குத்திக்கொள்ளுதல், சிடில், தேர் இழுத்தல், வெறியாடுதல், தீ மிதித்தல் முதலிய அநாகரிகச் செயல்கள் சமயத்தின் பேரால் நடக்கின்றன. இவை களால் மனிதனுடைய ஒழுக்கம் சற்றேனும் சீர்திருத்தம் அடைகிறதா? நம் உடலை நொறுக்கி வருத்தம் உண்டு பண்ணுவதினுல் சமய ஞானம் எவருக்கும் உண்டாகப் போவதில்லை. இச்செயல்கள் மூடச்செயல்களேயன்றி தூயச் செயல்கள் அல்ல. அறிவு பெருத மக்கள் இச்செயல்களைச் செய்தாலும் அறிவு பெற்ற மக்கள் இவைகளைப் பார்த்துக் கொண்டு நிற்கிருர்கள். இவ்வகளினுல் சமய ஆதாவிற்கு மிகுந்த சீர்கேடு உண்டாகிறது என்று நாம் அறியவேண் டாமா? ஆகவே சமயத்தின்பேரால் தமிழ் வழங்கும் ஈழப் பிரதேசங்களில் நடைபெறும் இந்த வழக்கங்களை அறவே ஒழித்துச் சமய நிலையங்களைத் தூய்மைப்படுத்துவதே நன்மை ஆகும்.

9. பலி கொடுத்தல் : இச்செயல் சமயத்திற்கும் பகுத்தறிவிற்கும் முற்றும் மாருனது. எல்லா சைவ

வைணவ ஆலயங்களிலும் எந்த நாட்டிலும் உயிர்ப்பலி கொடுப்பதில்லை. திருவள்ளுவர், சங்கப் புலவர்கள், சமயக்குரவர்கள் எல்லாரும் இதனைக் கண்டித்திருக் கிறார்கள். அப்படி இருந்தும் சில அம்மன் கோயில்களிலும் கருப்பராயன் சாஸ்தா முதலிய கோயில்களிலும் இது நடைபெறுகிறது. இதற்கு ஆதாரம் எங்கு இருக்கிறது. இதை ஏன் நிறுத்தக்கூடாது? தான் படைத்த ஒரு உயிரைத்தானே வதைப்பதற்கு எந்தத் தகப்பன் விரும்பு வான்? தாயும் விரும்புவாளோ? அப்படியிருக்க வேண்டு தலையின் பொருட்டு இவ்விதப் பொய்ச் சடங்குகள் செய்வது மிகவும் இழிவானது. தென்னிந்தியாவில் பலி நிறுத்தப் படுகின்றது. மக்களே நிறுத்தத் தொடங்கினார்கள். பிறகு அரசியலும் நிறுத்த முயலுகிறது. ஆகவே இதனை ஈழமும் கைக்கொண்டால் நலமாக இருக்கும். சமய நிலையங்கள் தூய்மை அடையும். சிறு தேவதைகளுக்குப் பலி கொடுத் தல் இன்னமும் ஈழநாட்டுக் கிராமங்களில் நடைபெறுகிறது என்று கேட்க தென்னாட்டுத் தமிழர்கள் திடுக்கிடுவார்கள். என்ன ஆறுமுக நாவலர் பெருமான் அவதரித்த நாட்டிலே இந்த அக்கிரமம் நடக்கிறதா என்று கேட்பார்கள். அந்த நாட்டிலே அப்பெருமான் எழுதியருளிய பால பாடத்தைப் பிள்ளைகள் படிப்பதில்லையா என்று கேட்கிறார்கள். படிக் கிறார்கள். ஆனால் நடவடிக்கைக்குக் கொண்டுவருவதில்லை என்று விடையளிக்க வேண்டியிருக்கிறது. இது தகுதியா?

10. சட்டம் உடனே வேண்டும்: தென்னாட்டில் இச் சீர்திருத்தங்களை ஒட்டி சட்டம் ஏற்பட்டுவிட்டது. அனுப வத்தை ஒட்டி சில திருத்தங்களும் செய்யப்படுகின்றன. ஈழத்தில் இப்பொழுதுதான் இதனை ஆலோசிக்கிறார்களாம். இதற்காக ஒரு ஆராய்ச்சிக் குழு ஏற்படுத்தியுள்ளார்கள். அவர்கள் ஊர்கள் தோறும் சென்று அறிஞர்களைக் கேட்டு ஒரு அறிக்கை விடப்போகிறார்களாம். இந்தச் சமயத்தை வீண் ஆக்காமல் ஈழத்துச் சைவ மக்கள் எல்லாரும் நன்றாக ஆராய்ந்து தம் கருத்துக்களை வெளியிடுவதே நல்லது. இந்தச் சமயத்தை விட்டுவிடக் கூடாது. இந்தியாவில் நடந்தேறிய

சீர்திருத்தங்களை நன்ருக வாசித்து இலங்கைக்கு அவைகளில் எவை பொருத்தமாக உள்ளன என்பதை அறிந்து அவைகளை வற்புறுத்துவார்களாக. ஈழநாடு என்ருல் இங்கே ஆறுமுக நாவலர் நாடு என்பது தென்னுட்டார்கள் எண்ணம். முன்நாளில் ஓர் ஆறுமுக நாவலர் இருந்தார். இனிமேல் ஒவ்வொரு ஈழநாட்டுத் தமிழனும் ஒவ்வொரு ஆறுமுக நாவலராக ஏன் ஆகக்கூடாது? அவ்வாறு ஆவதன் பொருட்டுத் தம் சமய நிலையங்களைத் தூய்மைப்படுத்திப் பயன்படுத்திக்கொள்வார்களாக.

---

## 2. தலப்பகுதி

# வெள்ளலூர்

**(கோவை கிழார்)**

1. ஊர் :—இது கொங்கு நாட்டில் நொய்யல் ஆற்றிற்குத் தெற்குக் கரையில் உள்ள ஒரு ஊர். கோவைக்கு அடுத்த போத்தனூர் நிலையத்திலிருந்து கிழக்கே மூன்று கல் அளவில் உள்ளது. சிங்காநல்லூர் கிராமத்திலிருந்து தெற்கே ஆற்றைக் கடந்தும் அடையலாம். ஊர் இரண்டு பிரிவுகளாக உள்ளது. வெள்ளலூர் என்றும் வேளாளர்பாளையம் என்றும் உள்ளன. பெரும் பான்மையான குடிகள் அகமுடையார்களும் வேளாளர்களும் தேவாங்கரும் ஆவார்கள். ஊருக்கு வடபால் நொய்யல் ஆறு ஓடுகிறது. இரண்டிற்கும் இடையில் நன்செய் நிலங் களும் தோப்புகளும் உண்டு. இவை மிகச் செழிப் பானவை. மற்றப் புறங்களில் எல்லாம் செவ்வல் புன் செய் நிலங்கள் இருக்கின்றன.

2. நாடு :—கொங்கு மண்டலத்தின் 24 நாடுகளில் ஒன்ருன ஆறைநாட்டின் மேற்பகுதியாகிய பேரூர் நாட்டில் உள்ளது இவ்வூர். இதனைக் கல்வெட்டுக்கள் பேரூர் நாட்டு வெள்ளலூர் என்று குறிக்கின்றன. இவ்வூரின் பண்டைய பெயர் கல்வெட்டுக்களின்படி வள்ளலூர் என்ற அன்ன தான சிவபுரி என்பது. இங்கே எந்த வள்ளல்

இருந்தான் அவன் எந்த வகையில் அன்னதானம் செய்தான் என்ற விவரங்கள் தெரியவில்லை. கல்வெட்டில் காணும் சொற்களைத் தவிர வேறு விவரங்கள் கிடைக்கவில்லை. கோயில் அர்ச்சகரிடம் ஒரு செப்புப்பட்டையம் இருக்கிறதாம். அதன் விவரங்கள் தெரியவில்லை.

3. கோயில் :—சிவாலயம் ஊரிலிருந்து ஆற்றிற்குப் போகும் வழியில் கால்வாயை ஒட்டி வடக்கே இருக்கிறது. கோயிலுக்கு முன்னால் ஒரு தோரணக் கல் நிற்கிறது. இதில் ஒரு பண்டைய கல்வெட்டு இருக்கிறது. அதற்கு மேற்கே சிவாலயம் இருக்கிறது. அது ஒரு சாதாரண கல் கட்டடம். சிற்ப வேலை மிகுதியாக இல்லை. சமீபத்தில் திருப்பணி செய்யப்பட்டது. செய்தவர்களின் குடும்பப் பதுமைகள் நிறுத்தப்பட்டுள்ளன. சுவாமியின் பெயர் - தேனீசுவரர் ; அம்மன்பெயர் - சிவகாமி அம்மை. சுவாமிக்குத் தேனூர் உடையார் என்று கல் வெட்டில் உள்ளது. தீர்த்தம் - காஞ்சிமா நதி. இத்தலம் கொங்கு நாட்டு முப்பத்தாறு சிவாலயங்களுள் ஒன்று.

4. சுற்றுக் கோயில்கள் :—சிவாலயத்திற்கு வடகிழக்கே பெருமாள் கோயில் ஒன்று இருக்கிறது. கள்ளி முளைத்து மிகவும் கேவலமான நிலையில் இருக்கிறது. சுவாமி பெயர் வரதராஜ பெருமாள். சிவாலயத்திலிருந்து ஆற்றுக்குப் போகும் வழியில் ஒரு அம்மன் கோயில் இருக்கிறது. இது வடக்கு பார்த்த சந்நிதி. அம்மன் பெயர் அழகு நாச்சியம்மன். இது கருங்கல்லால் கட்டப்பட்டது. கல்வெட்டுக்கள் உள்ளன. ஊருக்கு மேற்கே போத்தனூர்த் தடத்தில் பேச்சியம்மன் கோயில் இருக்கிறது. இது கிராம தேவதை.

5. பண்டைப்பெருமை:—பேரூர் நாடு மேற்கே வெள்ளி மலை யடிவாரமாகிய முட்டம் நாகேசுவரர் கோயிலிலிருந்து கிழக்கே வெள்ளலூர் முடிய இருந்தது என கல்வெட்டுக்களால் தெரிய வருகிறது. இந்த நாட்டிலே பண்டைக் காலச் சின்னங்கள் அபரிமிதமாகக் கிடைத்துள்ளன. அவைகளில் மாண்டவர் குழிகள் மிகுதியாக உண்டு.

பல்வகைக் கற்களால் சதுரமாகக் கட்டப்பட்ட இடுகுழி களில் பண்டைக் காலத்தில் முதுமக்களின் சவங்களை வைத்து அதனோடு அவர்கள் அருமையாக வைத்து வழங்கிய சட்டி முதலான பொருள்களையிட்டு மூடி யுள்ளார்கள். இதன் விரிவை பேரூர்ப் புராண ஆராய்ச்சியில் காண்க. அப்படிப்பட்ட மாண்டவர் குழிகள் வெள்ள லூருக் கருகாமையில் பல இருந்தன. மேலும் பல தடவை களில் 2000 ஆண்டுகளின்போது இருந்த உரோமானிய நாணயங்கள் நூற்றுக்கணககில் புத்தம் புதிதாகக் கிடைத் தன. சீசர் முதல் நீக்ரோ வரையில் விளங்கின நாணயங்கள் கிடைத்தன. இன்னும் எத்தனை புதையல்கள் உண்டோ என்று யாரும் தோண்டிப் பார்க்கவில்லை. பார்த்தால் கிடைககலாம்.



6. கல் வெட்டு :—கொங்கு நாட்டிலேயே மிகப் பழைமையான கல்வெட்டு இந்த ஊர்க் கோயிலில் தான் இருக்கிறது. பழைய தமிழ் எழுத்தில் உள்ள இக்கல் வெட்டும் 8-ம் நூற்றுண்டாக இருக்கலாம் என்று ஆராய்ச்சி யாளர்சள் கூறுகிறுர்கள். அதில் கோக்கண்டன் ரவி கோதை, கோக் கண்டன், வீரநாராயணன் என்ற பெயர்கள் காணப்படுகின்றன. இவ்விரு அரசர்களும் சேரமன்னர்கள். இவ்வரசர்கள் 'சந்திரசூர்யவம்ச ரத்தினங்கள்' என்ற பட்டப் பெயரால் குறிககப்பட்டுள்ளனர். ஆகவே இவர்கள் ஆண்வழியிலும் பெண்வழியிலும் இரு வம்சங்களின் தோன்றினவர்கள். சேரர்கள் சூரியவம்சத்தினர் என்று நாமக்கல் சாசனம் கூறுகின்றது. மேலும் சிவாலயத்தில் உள் மண்டபங்களில் தூண்களிலும் கோயிலுக்கு முன்னுல் உள்ள தோரணக் கல்லிலும் அழகு நாச்சியம்மன் கோயிலி லும் வரதராசப் பெருமாள் கோயிலிலும் பல கல்வெட்டுகள் உள்ளன. இவைகளை முற்றும் பரிசோதித்தவர் எடுத்ததாகத் தெரியவில்லை. மற்றும் சிவாலயத்தின் கருப்பக் கிரு கத்தைத் சுற்றி வெள்ளைக் காறையால் பூசியிருக்கிறபடியால் இவைகளில் இருந்த கல் வெட்டுக்கள் மூடப்பட்டுப் போயின. இவைகளையும் பரிசோதித்து எடுத்தால் தான்

உண்மை சரிதம் வெளியாகும். இதுவரைக் கிடைத்தவை களில் அடியிற் கண்ட குறிப்புக்கள் கிடைக்கின்றன.

மேலே கூறியபடி இவ்வூர் வள்ளலூர் என்ற அன்ன தான சிவபுரி என்றதும், சுவாமிபெயர் தேனூர் உடையார் அல்லது தேனீசுவரர் என்றதும், வரகுணபராந்தகன் என்ற அரசன் சந்திராதித்த குலதிலகன் என்ற விருதுவகித்தா னென்பதும், (அவன் 862 இருந்த வரகுணன், 907-ல் இருந்த பராந்தகன் என்ற இரு பாண்டிய சோழ அரச னுடைய பெயர்களையும் புனைந்தது நோக்குக). வெள்ளலூர் பேரூர் நாட்டைச் சேர்ந்தது என்பதும் ஆகிய செய்திகள் தெரிகின்றன.

7. வேறு செய்திகள் :—கொங்கு நாட்டைப் பற்றிக் கூறும் 'சோழன் பூர்வபட்டையம்' என்ற நூலில் அடியிற் கண்ட சில செய்திகள் வெள்ளலூரைப் பற்றி உள்ளன. சேரமான் பெருமாள் கரிகால் சோழன் சமயமுதலி முதலி யோர்கள் கொங்கு நாட்டுத் தலங்களைப் புதுப்பிக்கச் செல்லுகையில் வெள்ளை என்ற இருளன் பதிவனத்திற்குச் சென்று அங்கு காடு வெட்டத் தொடங்க அவ்வனத்திற் காத்திருந்த பேச்சி என்ற துர்க்கை பலிகேட்க சமய முதலி முப்பலி தருவதாக வாக்களிக்க அது சமாதானம் அடைந்த பிறகு வெள்ளலூர் நகரம்கட்டி, தேனீசுவர முடையார் கோயிலும் கட்டி, சகல நிபந்தங்கள் மானியங்கள் ஆட்சி யாளர்கள் ஏற்படுத்திப் பின் பேச்சியம்மைக்கு கோயிலும் முப்பலியும் ஏற்படுத்தி அதைக் கிராம தேவதையாக்கி விட்டுச் சென்றார்களாம். அதன்படி இன்றும் நடந்து வருகின்றதாம். வெள்ளை என்ற இருளன் ஆண்ட பதி யாகையால் இவ்வூருக்கு வெள்ளனூர் அல்லது வெள்ளலூர் என்று பெயர் வந்ததாம்.

ஆனால் கல்வெட்டுக்களில் வள்ளலூர் என்றும் அன்னதானசிவபுரி என்றும் இருத்தலுக்கு என்ன காரணம் விளங்கவில்லை.

---

4. சமயப்பகுதி

# ஜெர்மானிய அறிஞர்

(ம. சா.)

இந்திய நாட்டுச் சமயக் கொள்கைகளை ஆங்கிலரைக் காட்டிலும் ஜெர்மானியர்களே நன்ருகப் படித்துத் தம் மொழியில் எழுதியிருக்கின்றனர். வடமொழி வேதங்களை முதலில் மேற்கு மொழிகளில் மொழி பெயர்த்தினவர்கள் அவர்களே. வேதாந்த சாத்திரங்களையும் வேதாந்தக் கொள் கைகளையும் மேற்கே செலுத்திப் பரப்பினவர்கள் அவர்களே. சைவ சித்தாந்தத்தையும் படித்து ஆராய்ச்சி நூல்களையும் எழுதினவர் ஒரு ஜெர்மானியர் என்று முன்னே வெளியிட் டிருக்கிருேம். டாக்டர் ஷெமோரஸ் என்ற அந்த அறி ஞரைப் பற்றி முந்தி ஒரு குறிப்பு எழுதினேம்.

இப்போது மற்றும் அவரைப்பற்றித் தெரிந்துகொண்ட சில குறிப்புக்களை எழுதுவோம். சைவர்கள் இப்படிப்பட்ட செய்திகளை அறியவேண்டியது அவசியம் அல்லவா?

ஆசிரியர் ஷெமோரஸ் என்பவர் ஜெர்மனி நாட்டில் கார்ப்ரிஸ்லாண்ட் (Carfries land) என்ற வட்டத்தில் மெய்ரன்ஹாப் (Moiremhafe) என்ற ஊரில் 7-1-1879 ல் பிறந்தார். முதல் உலகப்போருக்கு முந்தி இந்தியாவில் ஒரு மிஷனரியாக (பாதிரி) வேலை செய்தார். அந்தப் போருக்குப் பிறகு 1918 முதல் அவர் ஒரு ஆசிரியராகவும் 1925 முதல் ஒரு போதகாசிரியராகவும் கீல் (Kiel) பல்கலைக்கழகத்தில் வேலை செய்தார். 1926 முதல் ஹாலே (Halle) பல்கலைக் கழகத்தில் போதகாசிரியராக இருந்தார். 1944 ல் அவர் காலகதியடைந்தார். அவர் இயற்றிய நூல்கள் பதினென்று ஆகும். 1914 முதல் 1941 வரை மேற்படி நூல்களை வெளியிட்டார். அவை யாவன:

1. வேறு நாட்டுமக்களும் கிறிஸ்து சமயமும் 1914
2. இந்திய சமயப்பான்மை 1914

3 இந்தியாவும் பிறநாடுகளும் 1925
4. சைவ சித்தாந்தம் 1923-25
5. இந்தியாவில் சமயமும் அரசியலும் 1928
6. இந்தியாவில் கிறிஸ்து சமயம் 1932-3
7. இந்தியாவில் பைபில் படிப்பு 1932
8. மிஷனரி வேலை 1935
9. எக்ஹாடும் மாணிக்கவாசகரும் 1936
10. இந்தியாவில் கிறிஸ்து போதனை 1941
11. ஸ்வீடிஷ் முயற்சிகள் 1940

இங்கே ஜெர்மன் மொழியில் உள்ள பெயர்களை கூடிய மட்டில் தமிழ்ப் படுத்தியுள்ளேன். பிழைகள் இருந்தால் பின்னே திருத்தப்படும். இந்நூல்கள் இந்நாட்டில் கிடைப்பது அரிது. கிடைத்தால் நமது சமாஜ நிலையத்தில வைக்க முயற்சி எடுத்துக்கொள்ளப்படும்.

---

6. கவிப் பகுதி

## யானையும் பாகனும்

(R. பஞ்சநாதம் பிள்ளை, தமிழ் ஆசிரியர், திருச்சி)

ஐயறிவுபெற்ற விலங்கு வகைகளில் யானை ஒன்று. இது உருவத்திலும் வலிமையிலும் சிறந்தது. இதற்கு தும்பி, மாதங்கம், எறும்பி, ஒருத்தல், நால்வாய், குஞ்சரம், அத்தி, வேழம், கரி, கைம்மா, கைம்மலை, நடைமலை முதலிய பெயர்களும் உண்டு. ஆண்யானை களிறு என்றும், பெண்யானை பிடி என்றும் வழங்கும். கண்ணுற்கண்டு மகிழும் பொருள்களில் யானையும் ஒன்று.

மனிதனுல் செய்ய முடியாத வேலைகள் யானையைக் கொண்டு செய்யப்படுகின்றன. காட்டில் மரங்களைத் தூக்கிச் செல்வதற்கும், கோயில்களில் நிகழும் திருவிழாக் காலங்களில் தேர் இழுப்பதற்கும் யானைகளை உபயோகப்படுத்து

கிறார்கள். அரண்மனைகளிலும் ஆலயங்களிலும் அலங்காரப் பொருள்களாக யானைகளை வைத்துள்ளார்கள். பிறர்செய்த தீமையை மனதிற்கொள்வதாகிய வன்மக்குணம் யானையிடம் உண்டு. 'வெம்புகரிக்கு ஆயிரந்தான் வேண்டுமே' என்றபடி யானைக்கு ஆயிரம் முழ தூரத்தில் இருந்தே பார்க்கவேண்டும் என்பர்.

இனி யானையைக்கொண்டு அறியப்படும் நீதிகள் பல. மனிதரிடத்தில் யானைபோன்ற வலிமையுடைத்தாகிய மெய்-வாய்-கண்-மூக்கு-செவி என்னும் பஞ்சேந்திரியங்கள்—ஐம் பொறிகள் - மனதை நல்வழியிற் செலுத்தாமல் தீநெறியில் கொண்டு செல்கின்றன. யானையைப் பிடித்துத் தூணில் கட்டுவதுபோல பொறிகளாகிய யானைகளை சிந்தனைத் தூணில் சேர்த்துக் கட்டவேண்டும். 'இந்திரியக் குஞ் சரத்தை ஞான இருங்கயிற்றால் சிந்தனைத் தூண் பூட்டிச் சேர்த்து' என்று ஒருவர் காட்டுகின்றார். 'ஆனை ஐந்தும் அடக்கி' என்கின்றார் திருமூலர். 'உரன் என்னும் தோட்டி யான் ஓர் ஐந்தும் காப்பான்' என்கின்றார் வள்ளுவர். 'பொய் யாம் நெறிக்கண் எனைக்கொடுபோய் உளப்போர்க் களிற்றை, அருளாம் கயிற்றாற் பிணித்து' என்று சிதம்பர சுவாமிகள் கூறுகிறார்.

இனி யானைக்கு மூன்றுமதநீர் உண்டு. இதனால் மும்மத வேழம் என்பர். மனித உயிர்க்கும் மூன்று வகையான மலங்கள் உண்டு. மும்மதம் உடலைப்பற்றியது. மும்மலங் கள் உயிரைப்பற்றியன. அவை ஆணவம், கன்மம், மாயை எனப்படும். மதங்கொண்ட யானை தன் நிலையறியாது பிறர்க்கு அடங்காமல் தன்னை அடுத்தவர்க்குத் துன்பம் செய்யும். மனிதனும் ஆணவம் முதலிய மலங்களின் வலிமையால் தக்க நெறியைவிட்டுத் தகாத நெறியிற் செல்லுகின்றான். மும்மலங்களில் ஆணவத்தைப் பெரு யானையாகக் கூறுவர். 'மன்றவர் அடியார்க்கென்றும் வழிப பகை களிறேயன்றோ' என்கிறார் சேக்கிழார். எனவே ஆணவம் தன்னையும் அறியாது பிற பொருள்களையும் அறி யாது துன்பத்தில் அகப்படுத்தும். ஆதலின் ஆணவத்தை

முதலில் நீக்க முயல்வர் ஆன்ேறார். 'ஆணவமான படலம் கிழித்து' என்கிருர் குமரகுருபரர்,

"ஆணவத் தோடத்து விதமானபடிமெய்ஞானத்
தாணுவினே டத்துவிதம் சாரும்நாள் எந்நாளோ"

என்று தாயுமானவர் கூறுகிருர்.

இவ்வாறு மதங்கொண்ட யானையை, யானைப்பாகன் பல உபாயங்களால் வலியப்பிடித்து வந்து அதை அடக்கி நடத்துகின்ருன். அதன் பிடரியில் ஏறி அமர்ந்து தன் காலால் ஏவிச் செலுத்துகின்ருன். பாகன் தன் காலால் இட்ட வேலைகளை, யானை தன் தலையால் உணர்ந்து செய்கின்றது. 'காலால் இட்ட வேலையைத் தலையால் செய்வது' என்றும் உலகப் பழமொழியும் வழங்குகின்றது. உருவத்தில் பெரிய யானை, உருவத்தில் சிறிய மனிதனின் குறிப்பறிந்து பணிந்து நடக்கிறது.

இவ்வாறே மும்மலம் பொருந்திய மனித உயிர்களாகிய யானைகளை பரிபாகனுகிய இறைவன் வலியவந்து ஆட்கொண்டு பக்குவப்படுத்தி தனது கால்களால் தன் திருவடி ஞானத்தால் அருள் செய்கின்ருன். உயிர்களிலும் தலைவனை பாகனின் திருவடிகளைத் தலையார வணங்கி அவன் திருவருளைப் பெறுகின்றன. இதை சிவப்பிரகாச சுவாமிகள் ஓர் செய்யுளில் அழகாகக் காட்டுகின்ருர்.

"கருத்தழி கடமிறங்கு கவுள்கரி வலிந்து பற்றித்
திருத்துபுதன்கால்ஏவும்செயல்செயக் கொள்வதன்றி
ஒருத்தல் வந்தறிந்து தானே உறவுகொண்டிடுவ துண்டோ
தெரித்திடில் அடியனேன்நின் திருவடிக்கத்திறந்தேன்"

(பிரபுலிங்கலீலை)

இதன் பொருள்:—யாவருடைய எண்ணங்களையும் கலக்குகின்ற மதநீர் பொழிகின்ற கன்னத்தையுடைய யானையைப் பலாத்காரமாகப் பிடித்துவந்து, நல்லவழியில் திருத்தி, தனது காலால் ஏவப்பட்ட வேலைகளைச் செய்யும் படியாக ஏற்றுக் கொள்வதன்றி, யானை தானே வலியவந்து

தலைவனை அறிந்து உறவுகொள்வதுண்டோ? இல்லை. ஆராயும் பொழுது அடியேனும் உமது திருவடித் தொண்டுக்கு அத் தன்மையனாயிருக்கின்றேன்.

எனவே யாவர்க்கும் மேலான இறைவன், யானையைச் செலுத்தும் பாகனைப்போல வந்து, அந்தந்த உயிர்களைப் பக்குவப்படுத்திச் செந்நெறியிற் செலுத்துகின்றான். இதை ஒருவகையில் உணர்த்தும்வகையில் கோயில்களில் நடை பெறும் திருவிழாக் காலங்களில் யானை வாகனக் காட்சியும் அமைந்ததுபோலும். இத்தகைய இறைவனாகிய பாகனைக் காணும் வகையில் கண்டறிந்து, அவனது வழிநின்று பணி யாற்றல் பெருமை யுடைத்தாகும்.

---

## 7. ஆராய்ச்சிப் பகுதி

# உணவும் உறக்கமும்

புலவர், முத்து. சு. மாணிக்கவாசக முதலியார், ஆரணி

திருவள்ளுவர் முதலிய நீதி நூலோரும் பல்வகைச் சமய நூலோரும் கூறியவாறு உணவையும் உறக்கத்தையும் குறைத்துக்கொள்ளல்வேண்டும். அளவினும் மிகுத்துக் கொள்ளல் ஆகாது. உண்ணவும் உறங்கவும் பிறவி எடுக்க வில்லை. உணவுக்குப் பிறப்போ ? உணர்வுக்குப் பிறப்போ ? உணர்வை ஒழுங்காக்கப் பெற்று முழுமைப்படுத்தி உண்மை யையும் இன்பத்தையும் அவ்வாறே செய்துகொள்ளப் பிறந்ததன்றி, உண்ணவும் அவ்வுணவு செரிக்கும் பொருட்டு உயிர்க்கவும் பிறந்ததாக் கொள்ளுவது எவ்வகையிலும் பொருந்தாது.

உணவு இன்றியமையாததே. எதற்கு ? உடலொடு உயிர் வாழ்வதற்கு ? வாழ்வு எதற்கு ? உண்பதற்கு என்று விடையிறுக்கலாமோ ? செவிக்கு உணவு இல்லாத போழ்து வயிற்றுக்கு வேண்டும் என்றார் திருவள்ளுவர். அவ்வயிற் றுக்கு வேண்டுவதுதான் எவ்வளவு ? 'சிறிது' தான்

வேண்டும். அதுதான் ஏன்? சுவை மிகுதியும் பின்பயன் படுவதுமாகிய கேள்வியின்பத்தை அடையும் பொருட்டே. பெரிதாயின், என்ன கேடு வரும்? கேடுந்துன்பமும் நோயும் காமமும் பெருகும். அக்கேள்வியின்பத்தை அடையும்பொழுது வெறுக்கப்படும் உணவு, பேரளவில் விரும்பவும் படுமோ? ஔவையார் கூறியவாறு வயிற்றிடும்பைப் பெருக்கம் ஒழியுங்காலமுமுளதோ? (1) ஒருநாளைய உணவை யொழியாமை, (2) இருநாளைய வுணவைக் கிடக்குமிடத்தில் ஏலாமை,(3) எந்நாளும் வயிறு, தன்னையுடையவனது தேடுந் துன்பத்தை யறியாமை என்னும் மூன்றும் அவ்வயிற்றின் இடும்பைப் பெருக்கம் என்றார்.

'பெரியோர் பலரும் சோற்றுத்துருத்தி' 'சோறிடுந் தோற்பை' 'தொலைவிலாச் சோற்றுத்துன்பக்குழி' 'மலமுஞ்சலமும் வழும்புந்திரையும் அலையும் வயிறு' 'சோறுங்கறியும் நிரம்பிய பாண்டம்' 'அன்னவிசாரம் அதுவே விசாரம்' என்பன முதலாகப் பலவாறு வயிற்றையும் அதனால் வரும் வருத்தத்தையும் அறியாமையுடையார்க்கு அறவுறுத்தினர். உறுத்தியும்,

> "பருத்திப் பொதியினைப் போலே வயிறு பருக்கத்தங்கள்
> திருத்திக் கறுசுவை போடுகின்றார்"

போட்டுக்கொண்டேதான் இருக்கின்றனர். எட்டுச்சுரைக் காய் கறிக்குதவுமோ? இவரிடத்திலேதான் திருவள்ளுவர்க்கு அளவுகடந்த சீற்றம் தோற்றம்பெற்று, அவரது வழுக்கியுந் தீயன சொல்லாத ஒழுக்கமிக்க நல்வாயிலிருந்து, "வாயால் நுகரப்படுஞ் சுவைகளையுணரும் உணர்வையுடைய மாக்கள் செத்தால் இழப்பதும் வாழ்ந்தாற் பெறுவதுமில்லாமையால்."

> "செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
> அவியினும் வாழினும் என்?"

என்று வைவு வந்துவிட்டது. 'இரைக்கே இரவும் பகலும் திரிந்து இளைக்'கும் இயல்புடையாரெதிரே திருவள்ளுவர்

இவ்வாறு கூறுவாரேல், அவர் பாட்டை ஆண்டவன்தான் அறியவேண்டும். 'அழிபசி,' 'பசி என்னுந் தீப்பிணி' எனப் பசித்துன்பத்தையும் ஈன்றாள் பசியைத் தீர்க்கச் சான்றோர் பழிக்கும் வினையைச் செய்யலாகாது என்னும் நல்லறத்தையும் உணர்த்திய அவர் சோற்றுவிமாக்களை அவ்வாறு சொல்வதில் அச்சங்கொள்வரோ?

உணவு உயிர்வாழ்க்கைக்கு இன்றியமையாததாயினும், அவ்வுயிர்தான் எடுத்த வினைப்பயனாகிய உடம்பைக்கொண்டு தான் வந்தவேலையை நிறைவேற்றிக்கொள்ள முயல்வதில் விரைய வேண்டும். "இன்றைக்கிருந்தாரை நாளைக்கிருப்ப ரென்று எண்ண"முடியாதவாறும் நின்றதும் இருந்ததும் கிடந்ததும் தன்னை உயிர்துறந்ததும் இங்நொடியிலே என்னுமாறும் விரையக்கெடும் உடம்பால் ஆகும் பயனை விரைந்து பெற முயலாத உயிர் வந்தவேலையை விட்டுப் பந்தற்காலைப் பிடித்துப் பொழுதுபோக்கும் வீணுயிரே எனப்படும். படவே உணவும் அவ்வுணவால் ஆம் பிறவும் பிறப்பின் பயனான பேரின்பம் பெறும் பொருட்டுச் சிறுதுணையாதல் வேண்டும் என்பது தெளிவாகும். ஆகவே, உணவைக் கொள்வதும், அதற்கு அடையும் தேடற்றுன்பமும், உண்டு உண்டு உறங்குவதும்; வீண்பொழுது போக்காதவண்ணம் விழிப்பொடு பார்த்துக்கொள்ளல் அறிஞர்கடனென்க.

உறக்கம், வினைசெய்து களைப்புற்று இளைப்பாற விரும்பும் உயிர்க்கு இன்றியமையாததேயாகும். ஆயினும், கும்பகருணனை வெல்லும் முயற்சியிலீடுபடலாமோ? வேதநூலிற் கூறும் பிராயம் நூறும் பெற்றாலும் பிறவிப்பயனை விரைந்து பெறமுயலாது, பகலை ஒருவாறு விழிப்பிற்கு ஒதுக்கி வைத்துவிட்டோமே என்று கவலையுடன் இரவை உறக்கத்துக்கே உரிமையாக்கும் அறிஞர், ஐம்பதாண்டு நிறைவிழாவிற்குத் தானே தக்கவராவர்? அவரை வினவினால், எனக்குத் தூக்கத்தில் விருப்பேயில்லை. உணவிலே தணவாத வேட்கையுண்டு. அது தூக்கத்தைத் தருகின்றது என்று விடை கூறலாம். அக்கூற்று இருவகை வழக்கிலும் வாய்மையாதல் பின்வருஞ் சான்றுகளால் விளங்கும். அவற்றை

ஒருசேரக் குறித்து, மேல் சில கருத்துக்களை வெளியிட விரும்புகின்றேம்.

'உண்டமயக்கம் தொண்டருக்கும் உண்டு' என்னும் முதுமொழி புதுமொழியாங்காலம் என்றும் நேராது. உணவுப்பங்கீடும் உற்பத்தியீனமும் உள்ள இக்காலத்தில், 'உண்டமயக்கம், உடையவர்க்குமில்லை' எனத் துணிந்துரைத்தல் கூடும். அடிமைத்தொழிலை விடியல் முதல் தூங்கும் வேளை வரையிற் செய்வாருமிருப்பர்.

" வல்லியும் மகனும் அந்த மறையவன் மனையிற் சேர்ந்து
சொல்லிய பணிக ளெல்லாம் சோர்வறச் செய்து பின்னும்
எல்லியோர் சாமம் என்ன எழுந்திருந் தேவல் முற்றி
அல்லிரு சாமம் சென்ருல் அளித்தகூழ் உண்டுறங்கிய"

சந்திரமதியும் சுந்தரமகனும்போல அவரும் தாம் பெற்ற உணவையுண்டு உறங்குவது குற்றமன்று என்பதே அப் பழமொழியின் உட்கோள். செல்வர் சிலர், தம் அடியார் உண்ணுது தொண்டாற்றலைப் பெரிதும் விழைவதேயன்றி உறங்காதுழைத்தலையும் வேண்டுகின்றனர். அடியர் சிலர்க்கு அத்தகைய நல்லோரும் வேண்டியிருக்கின்றனர்.

அப்பழமொழி உணர்த்துமாறு, உணவுக்கும் உறக்கத்திற்குமொரு நெருங்கிய தொடர்பு, பொழுதாலிடையீடின்றி இருக்கின்றது. மேற்பாட்டில், நல்லூர் வீரகவிராயர் வாக்கில் 'உண்டு' என்னுஞ் சொல்லையடுத்து அவரை யறியாமலே 'உறங்கி' என்பதும் அமைந்துவிட்டதோ என்னும் படி நிற்றலைக் காணலாம்.

" நாவுண்டு நீயுண்டு நாமந் தரித்தோதப்
பாவுண்டு நெஞ்சே பயமுண்டோ ?—பூவுண்டு
வண்டுறங்குஞ் சோலை மதிலரங்கத் தேயுலகை
யுண்டுறங்கு வானெருவ னுண்டு"

என்னும் இலக்கண நூல் வரலாற்றுப் பழம்பாடல், உணவுக்கும் உறக்கத்துக்கும் உள்ள இணக்கத்தை விளக்குவது போல் இருமுறை குறிக்கின்றது.

பட்டினத்துச் சுவாமிகள், "சோறுண்டு தூங்கிப்பின் சும்மா இருக்கச் சுகமுமுண்டே" என்றார். தாயுமானவர் "பசிதீர வுண்பதும் உறங்குவதும்" என்றார். அவரே, "பொய்யுடல் நிமித்தம் புசிப்புக்கலைந்திடல் புசித்தபின் கண்ணுறங்கல்" என்று கூறிக் காலம் இடையறவுபடாமை யும் உயிர் முயற்சியின்றிக் கண்ணே மூடிக்கொள்ளும் இயல்பையும், உண்டியுறக்கத்தின் பொழுதுபோக்கையும், அவ்வுலக நடையின் இழிவையும் ஆங்கே விளக்கியுள்ளார்.

எங்கள் தருமையாதீனத்து முனிவர்பிரானார் தமது சகல கலா வல்லிமாலை முதற்செய்யுளில், 'சகமேழும் அளித் துண்டான் உறங்க' என்று கூறிப் பெருந்தீனியே நாம களாகிய கரும்பைப் பெற்றுச் சுவைக்கத் தடைசெய்த பேருறக்கத்திற் கேதுவாயிற்றென்றருளினார்.

பொய்கையார், சோழன் செங்கணானும் சேரமான் கணைக்காலிரும்பொறையும் திருப்போர்ப் புறத்துப்பொருது உடைந்துழிச், சோழன் சேரனைச் சிறைவைக்க, அவனைக் 'களவழி நாற்பது' என்னக் களம்பாடி வீடுகொண்ட பொய்கையார், அப்போர்க்களத்தில் நரி உறங்குவதைப் பார்த்து, அதற்கு ஏது என்று என்ன ஆராய்ந்துணர்ந்து,

"படைப்பா லவிந்தார் பரூஉக்குடர் மாந்திக்
குடைப்புறந் துஞ்சும் இகலன்"

என்று தெரிவித்துள்ளார்.

உச்சியப்பனுயர் கழல்காட்டுங் கச்சியப்ப முனிவர் திருத்தணிகையில், வழக்கம்போல் உலாவி வரும்போது, ஒருநாள் மாலையில், அந்நகர்க்கும் இடைநகர் புடைநகர்க்கும் நடுவான மதிலுயர்ச்சியின் மனத்துயர்ச்சியை வைத்தார். அங்கு ஒன்று அயர்ந்து தூங்கக்கண்டார். காரணத்தை ஆராய்ந்தார். அது கிடைக்குமிடம் இன்னதென்று துணிந்

தார். அத்துணிவு அமரார்க்கும் நலஞ்செய்யும் முடிவையும் உட்கொள்ளப்பெற்ருர். அதைத் தமிழ்ப் பெரும்புலவர்க்கு.

“ மந்தரநட் பரவநெடுங் கயிறியைத்துக்
கடைந்துலவா மருந்து காண
அந்தரரும் இனிவருவர் போலும்என
முகிலினங்கள் ஆழி நோக்கா
திந்தமணி நெடுங் கிடங்கின் நறும்புனல்வாயி
மடுத்தெழுந்தவ் வுளைப்பு நீங்கச்
சந்தமணி மதிற்றலையிற் கிடந்துவெளி
பரந்தெங்குந் தளிக்கும் அன்றே. ” (248)

என்றருளினுர். இதிலும் மேகத்தின்கிடை (உறக்கம்) பேருணவைக் காரணமாகக் கொண்டிருத்தலை ‘ நெடுங்கிடங் கின் நறும்புனல் ’ என்றதால் அறிந்துகொள்ளலாம். உண்டி யின் சுவையையும் மிகுதியையும் நறுமை நெடுமை என்னும் அடைகள் உணர்த்துகின்றன. மிக்குண்டதே இளைப்பை ஆக்கிற்று. இளைப்பு நீங்கவே மதிலிற் கிடந்தது. தக்க அகன்ற இடத்தைக் கண்டுறங்க அவகாசம் இல்லாமல், வழி யிடையில் அணித்தாயுயர்ந்திருக்கக் கண்ட மதிலின் தலையும் அவசரத்திற்குத் துயிலிடமாயிற்று.

சிவாநந்தத்தை யுண்டாரும் ‘ எங்கெழிலென்ஞாயி றெமக்கு ’ என்று, “ நேசமொடுந் திருவடிக்கீழ் நீங்காதே தூங்கும் ” உண்மையைத், தூங்காமல் தூங்கிச் சுகம்பெறும் நாளில் உணர்தல் கூடும்.

உண்டு, உறக்கம் வரப்பெற்று, அவ்வுறக்கத்தைக் கொள்ளாமல் தடுத்து நீக்கிவரின், அச்செயல் பிணியையும் நோயையும் விளைக்கும் என்பர் மருத்துவ நூலார். முன்பே கவலையுற்ருர்க்குப் பேருண்டி கொண்டாலும் உறக்கம் வாராது ஒழிதலும் உண்டு. உண்டு உறங்க முயன்றும், பிறிதொன்ருல் தடைப்படத் துயருழத்தலும் உளது. உண்ணுமையால் உறங்கிலேன் எனலும், பெரிதும் உண்டும் இன்று காப்பிக்குடி முதலியவற்ருல் உறக்கமில்லை எனலும்

பலரிடங் கேட்கலாம். நண்டு ஒன்று (தன் பார்ப்புடன்) இரைகொண்ட மயக்கத்தால் உறங்க, விரைந்து சென்று, தன் அளேப்பள்ளியுள் நுழைந்தது. ஈரமுடைய அங்குத் தூவும் நீரலை இடைவிடாது அலைத்தமையால், அந்நண்டும் அதன் பார்ப்பும் தூங்காது துயருழந்தன. அதைக் கண்ட தலைவி தன் செயலொடு அது பொருந்துதலைத் தோழியிடங் கூறுவதாக ஒரு செய்யுள் (அடியளபெடைக்கு வரலாருக) யாப்பிலக்கணத்துள் காட்டப்பெற்றுளது. அஃது இஃது :

"ஆஅ அளிய அலவன்றன் பார்ப்பினொ
டீஇ ரிரையுங்கொண் டிரளைப் பள்ளியுட்
டூஉந் திரையலைப்பத் துஞ்சா திறைவன்றோள்
மேஎ வலைப்பட்ட நம்போ னறுநுதால்
ஓஒ வுழக்குந் துயர்."

இதனுல், துயிலுக்கு ஈரமும் நீர் மெய்யிற்படுதலும் வேண் டாதன என்பதும் விளங்கும். இங்குக் காட்டியவற்ருல் உணவும் உறக்கமும் நெருங்கிய உறவு பூண்டனவாகி, உயிர்க்கு யாதினும் அரிதாக எய்திய மானிடப் பிறப்பை வீணுக்கிவரும் உண்மை சொல்லாமலே விளங்குவதாயிற்று. ஆகவே,

'கண்ணைத்துயின்று அவமே காலத்தைப் போக்க' லாகாது. அத்தூக்கத்தை விளைக்குங் காரணங்களுள் தலைமை பூணும் உணவை அளவறிந்துண்ணவேண்டும். கழி பேரிரை, நோய்க்குத் தாய், இழிவறிந்துண்ணல், இன்பத்துக் கிடம், பேருண் அளவிலா நோய் ஆக்கும் என்பன கருத நின்றன.

சைவ பத்திகளிற் கிரியா பாதத்தில் போஜன விதியிற் கூறியவற்றை அறிந்துகொள்ளல் நன்று. "உண்ணுது நோற்பார் பெரியர்" உணவையும் உறக்கத்தையும் நீக்கிப் பேரின்பத்தை அடையவேண்டிய, "உண்ணுதுறங்காதிருந்

தாய் போற்றி" என்று வழிபட்டு வாழ்தல் அறிஞர்க் கேற்றது.

"உண்ணினும் பசிப்பினும் உறங்கினும்நின்
ஒண்மலரடியலால் உரையா தென்நாக்
கண்ணனுங் கடிகமழ் தாமரைமேல்
அண்ணலும் அளப்பரி தாயவனே
இதுவோ எமையாளுமா றீவதொன் றெமக்கில்லையேல்
அதுவோ வுன்தின்னருளா வடுதுறை யரனே.

எல்லாம் யோசிக்கும் வேளையில், பசிதீரச் சிறிதுண்டு, இளைப்பொழியக் கண்மூடிச் சிறுதுயில் கொண்டு, பிறவி தீரச் சிவ வழிபாட்டிலேயே காலமெல்லாம் செலவிட்டுப் பேரின்பம் பெற்றுய்தல் வேண்டுமென்பது சித்தித்தது.

"ஏழைத் தொழும்பனேன் எத்தனையே காலமெல்லாம்
பாழுக் கிறைத்தேன் பரம்பரனைப் பணியாதே."

—+—

இடமின்மையால் சில பகுதிகள் விடப்பட்டன—ப - ர்.

8. விரிவுரைப் பகுதி

# திருமூலர் திருமந்திர ஆலய விளக்கம்

(திருமந்திரமணி துடிசை கிழார் - அ. சிதம்பரனுர்)

(மலர்-22 ; இதழ்-11 ; 485-ம் பக்கத் தொடர்ச்சி)

இக்கருத்தினை உணராத சில கோயில் அதிகாரிகளும், கோயிலைப் பழுதுபார்ப்பவர்களும் பலிபீடத்தை மாற்றி வைத்துள்ளதைப் பல கோயில்களில் பார்க்கின்றோம். இதற்கு அதனுடைய தத்துவத்தை அவர்கள் மறந்து விட்டமையே காரணமாகும். கோயிலுக்குச் சென்று அங்குள்ள குறிகளை இன்னதென்று அறியாமலே வணங்குவது வழக்கமாய் விட்டபடியால், குற்றங்களுக்கு இடம் ஏற்படுகிறது.

மிகுந்த பொருட் செலவில், நெடுநாள் முயன்று, ஒரு கம்மியன் ஓர் உருவத்தை உருப்படுத்துவானேயாகில்; அதற்குக் கண் இருக்கும் இடம் காதாகவும், காது இருக்குமிடம் கண் ஆகவும், அல்லது, முன்னுல் அமையவேண்டிய கண்களைப் பின்னுல் அமைத்துச் செய்தானுனுல், அவ்வுருவம் எப்படி இருக்கும் என்று எண்ணிப்பாருங்கள். அவ்வளவு பொருளும் நாளும் வீணேயாகும். அதுபோன்றதல்லவோ ஆலயங்கள். ஆலயங்களை அமைக்கவேண்டிய முறைப்படி அமைக்காவிட்டால் அருள் உண்டாகாது. அவ்வாலயமும், அவ்வாலயமும் உள்ள ஊரும், அவ்வூரிலுள்ள குடிகளும் சீர் கெட்டு நிற்பார்கள்.

“ பதி, பசு, பாசம் எனப் பகர் மூன்றில்
பதியினைப் போல் பசுபாசம் அனுதி
பதியினைச் சென்றணுகாப் பசுபாசம்
பதி அணுகில் பசுபாசம் நிலாவே ”

தமிழ் மூவாயிரம்—காரணம்—159

இப் பாசுரத்தில், பதியின் அருகில் உள்ள பசுவினை பாசம் அதன் முன் நில்லாது என்று கூறியது காண்க. இந்த உண்மையைத்தான் இரண்டாங் கட்டில் (அர்த்த மண்டபம்) உள்ள ஆன் ஏறும் அதன் வால்பக்கமுள்ள பலிபீடமும் விளக்குகின்றன.

## 7. உடம்புக்கும் கோயிலுக்கும் உள்ள ஒற்றுமை

கோவிலில் உள்ள ஐந்து சுற்று மதில்கள் ஐந்து பூதங்களையும், ஐந்து கோசங்களையும் குறிப்பனவாம். உடம்பானது ஐந்து பூதங்களால் ஆக்கப்பட்டதும், அன்னமயம் பிராணமயம் (பிராணவாயு அல்ல) - மனோமயம் - விஞ்ஞான மயம் - ஆனந்தமயம் என்ற ஐந்து கோசங்களால் அமைந்ததும் ஆதலின் ; அவைகளைக் குறிக்கவே ஐந்து சுற்றுமதில்கள் ஏற்பட்டன.

சில கோயில்களில் ஒரே சுற்று மதிலும், சில கோயில்களில் மூன்று சுற்றுமதில்களும் இருக்கின்றனவே என்றால், காலம், இடம். பொருள் வசதிகளைக் குறித்து ; ஒன்றே ஐந்தையும், மூன்றே ஐந்தையும் குறிப்பாக உணர்த்தும்படி கட்டப்பட்டவை யாகும்.

கொடிமரம் (துவஜஸ்தம்பம்) உடம்பில் உள்ள வீணாத் தண்டு (சுழுமுனை நாடி செல்லும் வழி) என்பதனைக் குறிக்கும். வீணாத் தண்டு எப்படி வர்ட்டப்ரே (Vertibrae) என்ற எலும்பு வளையங்களைக் கொண்டு உள்ளதோ, அது போல கொடிமரமும் தாம்பிர வளையங்களைக்கொண்டுள்ளது. உடம்பில் உள்ள வளையங்கள் 33. அதுபோலவே, கொடிமரத்தின் வளையங்களும் 33. சுழுமுனை நாடி வழியாய்க் குண்டலினி சத்தி ஏறி மேலைத் துவாரத்தை (பிரமரந்திரம்) நணுகுவது போன்று, கொடிமரத்தில் கொடி ஏற்றுவது. வீணாத் தண்டின் உயரம் மூலாதாரத்தில் இருந்து மேலைத் துவாரம் (பிரம ரந்திரம்) வரையிலே யாகும். அதுபோல, கொடிமரமும் மூல இலிங்கத்தின் மட்டத்தில் இருந்து தூபியின் அளவேயாகும்.

தூபிக்கு மேற்பட்டும் குறைந்தும் இருந்தால் அது பழுதாகும். கோயிலும், ஊரும், ஊரில் உள்ள குடிகளும் நல்ல நிலையில் இருக்க முடியாது. தூபியும், கோபுரமும் ஒரே பொருளைக் குறிப்பன அல்ல, வெவ்வேறு பொருளைக் குறிப்பன. தத்துவம் அறியாதவர்கள் இரண்டு சொற்களையும் ஒரே பொருளில் தவறுதலாக வழங்குகிறார்கள். அவர்கள் எல்லாம் பொருள் தெரிந்தபின் அவ்வாறு வழங்கார்கள்.

## 8. தூல இலிங்கமும் சூக்கும இலிங்கமும்

கருவறையில் உள்ள மூல இலிங்கம் சூக்கும இலிங்கம் என்றும், கருவறைக்கு மேலே உள்ள தூபி தூல இலிங்கம் என்றும் கூறுப. மூலத்தானம் அல்லது கருவறை என்பதுதான் உடம்பில் உள்ள மூலாதாரத்தைக் குறிக்கும். இதனை :

"பாய விமானமும் தூலம தாகுமால்
ஆய சதாசிவம் ஆகுநற் சூக்குமம்
பாய பலிபீடம் பத்திர விலிங்கமாம்
ஆய அரனிலை ஆய்ந்துகொள் வார்கட்கே"
—தமிழ் மூவாயிரம்-காலோத்தரம் - 1689

"எருவிடும் வாசற்கு இருவிரல் மேலே
கருவிடும் வாசற்கு இருவிரல் கீழே
உருவிடு சோதியை உள்க வல்லார்க்கு
கருவிடும் சோதி கலந்துநின் றானே"
—தமிழ் மூவாயிரம் - வீராகமம் - 565

என்னும் திருமூலர் வாக்கால் அறியலாம்.

உடம்பினுள் இருக்கும் கருவறையாகிய மூலாதாரத்தைப்போலவே, கோயிலிலும் கருவறை என்கிற மூலத்தானம் உள்ளது. அதனைக் கற்பக்கிரகம் என்று கூறுவர் வடமொழியாளர். ஆங்கிலர் சாங்டம்-சாக்டோரம் (sanctum-sactorum) என்பர்.

குண்டலினி சத்தியைப் பற்றி எழுதிய சர் ஜான் உட்ரப் (Sir John Woodroffe) என்னும் ஆங்கில தத்துவ நிபுணரும், பம்பாயில் உள்ள டாக்டர் வசந்த ரிலே (Doctor Vasant G. Rele) என்பவரும் எழுதிய சர்ப்பெண்ட் பவர் (Serpent power) என்னும் தங்களுடைய புத்தகங்களில் உடம்பின்கண் மூலாதாரத்தில் முக்கோணத்தின் நடுவில் இலிங்க உருவம் உள்ளதைப் படம் பிடித்துக் காட்டி, அதற்கு விளக்கமும் எழுதியுள்ளார்கள். அவர்கள் கூறும் பகுதி அடியில்* காட்டப்பட்டுள்ளது.

---

*" Kundalini" By Dr. V. G. Rele P. P. 44—45
Sacrum (Kanda) is called Mula - Kanda or Mula -

நம் நாட்டு யோகியர்கள் தங்களுடைய யோகக் கண்ணால் ஆறு ஆதார தரிசனம் செய்துள்ளார்கள். அப்படிப் பார்த்த யோகிகள்தான் உலகம் உய்யும்பொருட்டுக் கோயில்களைக் கட்டச் செய்து அவைகளில் ஆதார மூர்த்திகளை அமைத்துள்ளார்கள். மூலாதார மூர்த்தியே கோயிலில் மூலத்தானத்தில் (கருவறையில்) இருப்பது. ஏனைய ஆதார மூர்த்திகள் கோபுர நிலையில் காட்டப்பட்டுள்ளார்கள்.

மூலாதாரத்துக்கு அதிதேவதை விநாயகர். மூலாதாரத்தில் முக்கோணத்தின் நடுவில் இலிங்க வடிவமாய் இருப்பது அவ் விநாயகமூர்த்தியே. விநாயகருக்கும் இலிங்கத்துக்கும் பேதம் இல்லை. இப்போதும் நாம் பெண்களைச் சாணியில் பிள்ளையார் பிடிக்கச் சொன்னால், இலிங்க உருவத்தையே அவர்கள் பிடித்து வைப்பது வழக்கமாயுள்ளது. இது தொன்றுதொட்ட பழக்கம்.

'சூக்கும இலிங்கம்' என்றால் அருவுருவ இலிங்கம். அது அருவமும் அல்ல, உருவமும் அல்ல.

'தூல இலிங்கம்' என்றால் உருவத்தோடு விளங்குவது. சதாசிவ மூர்த்தியின் ஐந்து முகங்களும் வெளிப்படையாகக் கட்புலனாவது.

தூபி வேறு ; கோபுரம் வேறு. தூபி என்பது கருவறையின் மேலே ஐந்து முகங்களோடும் ஒற்றைக் கலசத்

---

Adhara ie. the root bulk or rout Support of the Meru a Dandu (வீணாதண்டு). The Mula-Adhara is the receptacle of a plexus called Mula-Adhara Chakrum. In the Agama it is said that the Peri-Carp of the Adhara-Lotus is a *Triangle* or *Kanda*' Inside *the triangle there is a Linga* ie phallus called Swayambu which is tapering like a new unopened leaf-bud. The description of the phallus taleies with the lower end of the spinal card with its durae Sheath, which ends in the Sacrum (Kanda) at the leval of the Second Vertebrae.

The phallus extends a little over the triangle, and above is the *Kundalini* is said to the sleeping, closing the mouth of the Brama-Dwara which is on a level with the lower end of the Spinal-Canal called *Chitra*.

துடனும் விளங்குவது. கோபுரம் என்பது சுற்று மதில் களின் நடுவில் விளங்குவது. 3 - 5 - 7 - 9 நிலைகளைக் கொண்டது. 3 - 5 - 7 - 9 நிலைகளுக்கு ஏற்ப, 3-5-7-9 கலசங்களைக் கொண்டது. கோபுரம் ஆறு ஆதார நிலைகளைக் குறிப்பது.

## 9. தூபி

சதாசிவ நாயனாரின் ஐந்து முகங்களையும் அததற்குரிய நிறங்களுடன் அமைத்துக் காட்டுவதுதான் தூபியாகும்.

"சத்திதான் நிற்கின்ற ஐம்முகம் சாற்றிடில்
உத்தரம் வாமம், உரைத்திடும் சத்தி
பச்சிமம், பூர்வம் தற்புருடன், உரை
தெற்கில் அகோரம், தென்கிழக்கு ஈசனே"
—தமிழ் மூவாயிரம் - காலோத்தரம் - 1711

என்னும் திருமூலர் வாக்கின்படி தூபியின் தென்கிழக்கில் ஈசானமுகத்தையும், கிழக்கில் தற்புருட முகத்தையும், தெற்கில் அகோர முகத்தையும், வடக்கில் வாமதேவ முகத்தையும், மேற்கில் சத்தியோசாதமுகத்தையும் அமைக்கவேண்டும்.

"நடுவு கிழக்குத் தெற்கு உத்தரம் மேற்கு
நடுவு படிகம்நற் குங்கும வன்னம்
அடைவுள அஞ்சனம் செவ்வரத் தம்பால்
அடியேற் கருளிய முகமிவை ஐந்தே"
—தமிழ் மூவாயிரம் - காலோத்தரம் - 1705

என்றபடி ஈசான முகத்திற்குப் படிக நிறமும், தற்புருட முகத்திற்கு மஞ்சள் நிறமும், அகோர முகத்திற்குக் கருப்பு நிறமும், வாமதேவ முகத்திற்குச் சிவப்பு நிறமும், சத்தியோசாத முகத்திற்கு வெள்ளை நிறமும் கொடுக்க வேண்டும். இயற்கையாகவே இவ் வைம்முகங்களும் ஐந்து நிறங்கள் உடையனவாய் இருப்பதால் சதாசிவப் பெருமானுக்கு "ஐந்நிற வண்ணர்" (பஞ்சவர்ண ஈச்சுரர்) என்ற பெயரும் உண்டு.

பழைய கோயில்களில், அதாவது திருப்பணி நடக்கப் பெறாத பழைய கோயில்களில், தூபி அமைப்பு மேலே காட்டிய திருமூலர் வாக்கின்படி இருப்பதைக் காணலாம்.

தூபியின் ஒற்றைக் கலசத்தையே ஈசான முகமாகக் கொள்ளுவதும் உண்டு. அப்படிக் கொண்டால் தூபியின் தென்கிழக்குப் பக்கத்தில் ஈசான முகத்தை அமைக்க மாட்டார்கள். தற்காலம் குடமுழுக்கு (கும்பாபிஷேகம்) சகலமாகிய அவ் வீசானமுகத்திற்கே நடைபெறுகின்றது. ஐந்து முகங்களில் ஈசானமே முக்கியமானது. ஈசானத்திற்கு அபிடேகம் செய்தால் மற்றைய முகங்களுக்கும் செய்தமாதிரி என்று கொள்ளுகிறார்கள்.

## 10. மகேச மூர்த்தங்கள்

மகேச மூர்த்தங்கள் 25-ம் அருள் வடிவங்களே. ஒவ்வொரு முகத்திற்கும் ஐந்து மூர்த்தங்கள்மேனிக்கு 25 மூர்த்தங்கள் உண்டு.

நான்கு திக்குகளிலும் அந்தந்த முகத்தைச் சேர்ந்த ஐந்து மூர்த்தங்களில் ஒன்றின் படிமத்தை அமைப்பது முறையாகும்.

ஈசானம் :—1. சோமாஸ்கந்தம் 2. கூத்தப் பெருமான்
3. இடபாரூடர் 4. சந்திரசேகரர்
5. கலியாணசுந்தரர்

தற்புருடம் :—1. பிச்சாடனர் 2. காமாரி 3. காலாரி
4. சலந்தராரி 5. முப்புராரி

அகோரம் :—1. கயாரி 2. வீரபத்திரர் 3. தென்முகக்கடவுள்
4. கிராதர் 5. நீலகண்டர்

வாமதேவம் :—1. கங்காளர் 2. சக்ரதானர் 3. கய முகானுக்[கிரகர்
4. சண்டேசானுக்கிரகர் 5. ஏகபாதர்

சத்தியோசாதம்:—1. இலிங்கோற்பவர் 2. சுகாசீனர்
3. உமாமகேசர் 4. அரிஅர்த்தர்
5. அர்த்தனரி

தற்காலம் கோவிலைப் புதுக்கி வேலை செய்பவர்கள் இவைகளை யெல்லாம் கவனியாது, தவறுதலாக வெவ்வேறு படிமங்களை அமைத்தும் வெவ்வேறு நிறங்களைக் கொடுத்தும் உலகிற்குக் கேடு சூழ்கின்றார்கள். ஆகம விரோதமான காரியங்களே இப்போது நடைபெறுகின்றன.

தூபியின் கிழக்கே இடபாரூடரையும், வடக்கே பிரமாவையும், மேற்கே திருமாலையும், தெற்கே தென்முகக் கடவுளையும் தற்காலம் தூபிகளில் அமைத்துள்ளார்கள். இதற்கு ஆதாரம் ஆகமத்தில் இல்லை.

பிரம மூர்த்தமும் திருமால் மூர்த்தமும் 25 மூர்த்தங்களில் சேர்ந்ததல்ல. ஆதலின், தூல இலிங்கமாகிய தூபியில் அப் படிமங்கள் இருக்க நியாயம் இல்லை.

தூபி, ஒருநிலை, இருநிலை, மூன்று நிலைகளாகவும், ஐந்து நிலைகளாகவும் அமைப்பதுண்டு. சில பழைய கோயில்களில் ஒன்றுக்கு மேற்பட்ட நிலைகளைப் பார்க்கலாம்.

ஒருநிலையுள்ள தூபியில் ஈசானம் முதலிய பஞ்ச முகங்களும், இருநிலைகளும் அதற்கு மேற்பட்ட நிலைகளும் உள்ள தூபியில் ஈசானம் முதலிய ஐந்து முகங்களுக்குச் சேர்ந்த முகங்களை வரிசையாக அமைப்பது வழக்கம். இனிப் புதுப்பிக்கும் கோயில்களில் இந்த முறையைக் கைக்கொள்வார்களானல் உலகத்திற்கு நன்மை ஏற்படும்.

## 11. கோபுரம்

வாயிலும் ஐந்து நிலைகளையும் கொண்ட கோபுரம் எதனைக் குறிக்கின்றதென்றுல், உடம்பின்கண் உள்ள ஆறு ஆதார நிலைகளைக் கொண்டது.

வாயிலாக உள்ளது மூலாதாரத்தையும் அதற்கு மேற்பட்ட நிலைகள் மேல் ஆதாரங்களையும் குறிக்கின்றன. ஒவ்வொரு ஆதார அதிதேவதைகளையும் அந்தந்த ஆதாரத்திலுள்ள புவனங்களின் தெய்வங்களையும் அந்தந்த நிலைகளில் அந்தந்த ஆதாரத்திற்குரிய நிறங்களோடு கோபுரங்களில் அமைக்க வேண்டும். சில பழைய கோயிற் கோபுரங்களில் இம்முறையைப் பார்க்கலாம்.

### மூலாதாரம்

கோபுர வாயில் மூலாதாரத்தைக் குறிப்பதனுல் அதன் ஆதார அதிதேவதை கணபதியை வலப் பக்கத்திலும், முருகரை இடப்பக்கத்திலும் அமைக்க வேண்டும்.

### சுவாதிட்டானம்

வாயிலுக்கு மேலே அடுத்துள்ள நிலை சுவாதிட்டானத்தைக் குறிக்கும். அந்த நிலையில் வாயிலுக்கு இருபுறத்திலும் பிரமா - வாணி இவர்களின் படிமங்களை அமைக்கவேண்டும். பிருதிவி தத்துவ புவனங்களாகிய 108 புவன தேவர்களின் படிமங்களும் சுற்றியும் அமைக்க வேண்டும். இந்நிலைக்கு ஏற்பட்ட நிறம் மஞ்சள். இது நிவிர்த்தி கலையைக் குறிக்கும்.

### மணிபூரகம்

அதற்கு அடுத்து மேலுள்ள நிலை மணிபூரகம் என்னும் ஆதாரத்தைக் குறிக்கும். இவ்வாதார அதிதேவதை மால் - திரு. இவர்களின் படிமங்களை வாயிலுக்கு இருபுறமும் அமைக்க வேண்டும். ஒவ்வொரு நிலைக்கும் வாயில்கள் உண்டு. அப்பு தத்துவ புவனங்களாகிய 56 புவன தேவர்களையும் அத்தத்துவத்துக்கு உரிய நிறமாகிய நீலம் அல்லது பச்சை நிறத்தோடு அமைக்கவேண்டும். இந்நிலை பிரதிட்டா கலையைக் குறிக்கும்.

### அனகதம்

அதற்கு அடுத்து மேலுள்ள நிலை அனகதம் என்னப்படும். இது தேயு தத்துவத்தைக் குறிக்கும். ஆதார அதிதேவதை உருத்திரன் - உமை. இவர்களின் படிமங்களையும் தேயு தத்துவ புவனங்களாகிய 27 புவன தேவர்களின் படிமங்களையும் தேயு தத்துவத்துக்குரிய நிறமாகிய சிவப்பு நிறத்தோடு அமைக்க வேண்டும். இந்நிலை வித்தியா கலையைக் குறிக்கும்.

### விசுத்தி

அதற்கு அடுத்து மேலுள்ள நிலை விசுத்தி என்னப்படும். இது வாயு தத்துவத்தைக் குறிக்கும். ஆதார அதிதேவதை மகேசன் - மகேசை. இவர்களின் படிமங்களையும் வாயு தத்துவ புவனங்களாகிய 18 புவன தேவர்களின் படிமங்களையும், வாயு தத்துவத்துக்குரிய நிறமாகிய சாம்பல் அல்லது புகை நிறத்தோடு அமைக்க வேண்டும். இந்நிலை சாந்தி கலையைக் குறிக்கும்.

### ஆஞ்ஞை

அதற்கு அடுத்து மேலுள்ள நிலை ஆஞ்ஞை என்னப் படும். இது ஆகாய தத்துவத்தைக் குறிக்கும். ஆதார அதிதேவதை சதாசிவன் - மனோன்மணி. இவர்களின் படிமங்களையும், ஆகாய தத்துவ புவனங்களாகிய 15 புவன தேவர்களின் படிமங்களையும், ஆகாய தத்துவத்துக்குரிய நிறமாகிய வெள்ளை நிறத்தோடு அமைக்க வேண்டும். இந் நிலை சாந்தியாதீத கலையைக் குறிக்கும்.

மொத்தம் 224 புவனங்களும் அவைகளுக்குரிய புவன தேவர்களும் அவரவர்களுக்குரிய பத்தினிமார்களுடன் கோபுரத்தில் காட்சியளிப்பார்கள்.

கோபுரம் ஒன்று - மூன்று - ஐந்து - ஏழு - ஒன்பது நிலைகளாகக் கட்டப்படுவதும் உண்டு.

ஐந்து நிலைகள் உள்ள கோபுரம் ஆறு ஆதாரங்களைக் குறிக்கும் என்று மேலே காட்டப்பட்டது. அதற்கு மேற் பட்ட நிலைகள் நிராதார தத்துவங்களையும், மீதானத்தையும் குறிப்பனவாம்.

"ஆதாரத் தாலே நிராதாரத்தே சென்று
மீதானத்தே செல்க உந்தீ பற
விமலற் கிடமதென் றுந்தீபற" —திருவுந்தியார்

என்ற திருவுந்தியார்ச் செய்யுளால் அறியலாம். ஏழு நிலைகளா யிருந்தால், நிராதாரத்துக்கு ஒன்றும், மீதானத்துக்கு ஒன்றும் ஆகக் கொள்க.

ஒன்பது நிலைகளா யிருந்தால் விந்து - நாதம் - சத்தி - சிவம் என்ற நான்கு தத்துவங்களைக் குறிப்பனவாகக் கொள்க.

ஒன்று - நிலைகளா யிருந்தால், அவைகளிலேயே ஆறு ஆதாரங்களின் குறிப்புக்கள் கொண்டதாகக் கொள்க. அவ்வண்ணமே அந்நிலைகளை சிற்பிகள் அமைக்கவும் வேண்டும்.

## 12. மேலைக் கோபுரவாசல்

கிழக்கில் இருக்கும் கோபுரவாசல் மூலாதாரத்திலுள்ள பிரம துவாரத்தையும், மேலைக் கோபுரவாசல் ஆஞ்ஞையில்

உள்ள பிரமரந்திரத்தையும் குறிக்கும். மேலைக் கோபுர வாசலைச் சோக்கவாசல் என்றும் கூறுவது உண்டு. இத னுடைய தத்துவத்தைத் திருமூலர்,

''மூலத் துவாரத்து மூளும் ஒருவனை
மேலைத் துவாரத்தின் மேலுற நோக்கிமுற்
காலுற்றுக் காலனைக் காய்ந்தங்கி யோகமாய்
ஞாலக் கடவூர் நலமா யிருந்ததே''

—தமிழ் மூவாயிரம் - காமிகம் - 331

என்ற பாசுரத்தில் விளக்கியுள்ளார்.

மேலைத் துவாரமாகிய பிரமரந்திரம் திறந்தால் ஞானம் கைகூடும், சிவத்தையடையலாம் என்னும் கருத்தை விளக் கவே ஆண்டுக்கொருதரம் சோக்கவாசல் திறப்பது என்ற விழா கொண்டாடுகிறார்கள். இது பங்குனி உத்திரத்திலும், மார்கழித் திருவாதிரையிலும் இருமுறையும் கொண்டாடுவ தும் உண்டு. திருப்பேரூரில் இவ்விழா கொண்டாடப்படு கிறது.

ஆதார மூர்த்திகள் எல்லாம் அமையப் பெற்றதே கோயில் ஆகும்.

யாகசாலை உருத்திரர் தொழிலையும், அம்பலம் மகேசர் தொழிலையும், மண்டபங்கள் கலைகளையும் குறிப்பனவாம். கருவறை சதாசிவ தத்துவத்தையும், பிரமன் அல்லது வாணி கோவில் பிரம தத்துவத்தையும், விண்டு கோயில் விண்டு தத்துவத்தையும் குறிக்கும். இவைகள் எல்லாம் ஐந்தொழில்கள் (பஞ்ச கிருத்தியம்) என்னும் நித்தியம் என் பதைக் குறிக்கின்றன.

## 13. நந்தி

" வள்ளற் பெருமானுக்கு வாய் கோபுரவாசல் '' என்ற ஆகம வாக்கியத்தின்படி கோபுரவாசல் வாயானால், வாய்க் குள்ளிருக்கும் நாக்குக்கு உவமையாகக் கோயிலில் எதைக் கூறுவது ?

கோபுர வாயினுக்கு அடுத்தாப்போல் இருப்பது கொடிமரமும் நந்தியும். கொடிமரம்தான் வீணாத்தண்டு போன்றது என்று முன்னமே கூறினும். நந்தி நாக்குக்கு உவமையாகும். நாக்கினுடைய உதவியின்றி எப்பொருளும் உடம்பினுள் செல்லாதவாறு போல, நந்தியெம்பெருமானுடைய உத்திரவு பெற்றால் அன்றிக் கோயிலின் உள்ளே நுழைந்து வணங்கக் கூடாது என்று விதித்திருக்கிறார்கள்.

தேகத்தில் இருதயம் எப்போதும் துடித்துக்கொண்டு இருப்பதுபோல, அம்பலத்தில் உள்ள கூத்தப் பெருமான் எப்போதும் நட்டம் ஆடிக்கொண் டிருப்பார். அம்பலம் ஐந்து. அவையாவன : சிதம்பரம்-திருவாலங்காடு-மதுரை-குற்றாலம்-திருவொற்றியூர்.

## 14. இலிங்கத்தின்பேரில் நாகபடம் அணிதல்

கோயில்களில் இலிங்கத்தின்பேரில் நாகபடம் சாத்துவதானது, டாக்டர் ரிலே கூறுவதை ஒப்ப, குண்டலினிசத்தி பாம்புமண்டலித்த பிரகாரம் பிரம துவாரத்தில் தலை வைத்துப் படுத்திருப்பதை ஒக்கும். இக் குண்டலினிசத்தியைத் தான் தியான பலத்தால் எழுப்பி, வீணாதண்டின் அடிப்பாகத்தில் உள்ள பிரம துவாரத்தின் வழியாகச் செல்லும்படி செய்தால், மேலைப் பக்கத்தில் உள்ள பிரமரந்திரத்தில் புக்கு, அச் சத்தியானது சீவனுக்குச் சிவதரிசனத்தைச் செய்விக்கும். இதனை அடியார்களுக்கு அடிக்கடி ஞாபகப் படுத்தவே ஆண்டுக்கொருதரமோ இருமுறையோ ஒவ்வொரு கோயிலிலும் விழாக் கொண்டாடப்படுகிறது.

இலிங்கத்துக்குச் சாத்தும் நாகபடம் இன்னும் எதனைக் குறிக்கின்றதென்றால், அணுசதாசிவர்கள் எல்லாம் ஆணவ மலம் ஒன்று மாத்திரம் உடைய விஞ்ஞானகலர் என்ற செய்தியையும் விளக்குகின்றது. இதனை,

"ஆணவமாதி மலம் ஐந்து அலரோனுக்கு
ஆணவமாதி நான்காம் மாற்கு, அரனுக்கு

ஆணவமாதி மூன்று, ஈசர்க் கிரண்டேன்ப
ஆணவமொன்றே சதாசிவற் கானதே''
—தமிழ் மூவாயிரம் - சுப்பிரம - 2143

''ஆணவ மாகும் விஞ்ஞானகலருக்குப்
பேணிய மாயை பிரளயாகல ருக்கு
ஆணவ மாயையுங் கன்மமும் மூன்றுமே
காணும் சகலருக்குக் காட்டு மலங்களே''
—தமிழ் மூவாயிரம் - சுப்பிரம - 2202

அருண்மூர்த்தங்கள் எல்லாம் சம்பு பக்கம் என்றும் ஆன்ம கோடிகளில் பக்குவப்பட்டு மேல் நிலைகளையும் பதவிகளையும் அடைந்து, ஐந்தொழில் அதிகாரம் பெற்ற அணு பக்கம் என்றும் ஆகமங்கள் கூறுநிற்கும்.

மேலே கூறப்பட்ட மலங்கள் எல்லாம் அணுபக்கத்தார்க்கே யன்றி சம்புபக்கத்தார்க்கு இன்மை தெளிக.

## 15. ஆலயம் அவசியமா?

சரியை, கிரியை, யோக, ஞானங்களைப் படிமுறையாகக் கூறிய திருமூலரே,

''மாடத்துளான் அவன் மண்டபத்துளான் அவன்
கூடத்துளான் அவன் கோயிலுள்ளான் அவன்
வேடத்துளான் அவன் வேட்கைவிட்டார் நெஞ்சில்
மூடத்துளே நின்று முத்தி தந்தானே''
—தமிழ் மூவாயிரம் . சுப்பிரம - 2568

என்று கூறியுள்ளாரே. சிவதீக்கை பெற்று, சிவபூசை செய்து, ஞானம் எய்திய பட்டினத்தடிகளே,

''கல்லிலும் செம்பிலுமோ இருப்பன் எங்கள்
கண்ணுதலே''

என்று கூறியுள்ளாரே. எப்போதும் சிந்தித்தும், பேசியும், வணங்கியும் வந்த தவத்தில் வல்ல சிவவாக்கியரும்,

''நட்டகல்லைத் தெய்வமென்று நாலுபுட்பம் சாத்தியே
சுற்றிவந்து முணுமுணென்று சொல்லும்மந்திரம் ஏதடா

நட்டகல்லும் பேசுமோ நாதன்உள் இருக்கையில்
சுட்டசட்டி சட்டுவம் கறிச்சுவை அறியுமோ"

என்றும் கூறியுள்ளாரே என்பீராயின் கூறுதும்: இன்னணம் கூறினவர்கள் எல்லாம் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பவைகளை முறையாகக் கொண்டு ஒழுகினவர்களே. உருவ வழிபாட்டை என்றும் கொண்டவர்களே. அப்படி இருந்தும் அவர்கள் கூறியதற்குப் பொருள் வேறு உள்ளது என்று கொள்ளவேண்டும்.

"கோயிலுளான் அல்லன்"

என்று கூறிய திருமூலரே,

"தாபரத் துண்ணின்று அருளவல்லான் சிவன்
மாபரத் துண்மை வழிபடுவா ரில்லை
மாபரத் துண்மை வழிபடு வாளர்க்குப்
பூவகத் துண்ணின்ற பொற்கொடி யாகுமே"
—தமிழ் மூவாயிரம் - காலோத்தரம் - 1688

என்று கூறுவது ஏன்? தாபர இலிங்கத்தை, அதாவது கோயிலில் இருக்கும் இலிங்கத்தை வணங்குவீர்களாக. சிவன் அவ்விலிங்கத்தினின்றும் அருளவல்லான் என்று எவ்வளவு தெளிவாகக் கூறியுள்ளார் பாருங்கள்.

சாக்கிய நாயனூர் கல்லால் எறிந்து இலிங்கத்தை வழிபட்ட சரித்திரத்தை ஞாபகம் செய்துகொள்வீர்கள் ஆனல் உண்மை விளங்கும்.

உலகின்கண் சிவன் இருவிதமான உருக்கொண்டே அருள் செய்யவல்லான்.

"தாபர சங்கமம் என்றிரண் டுருவினின்றும்
மாபரன் பூசைகொண்டு மன்னுயிர்க் கருளிவைப்பன்"

என்றூர் அருணந்தி சிவமும். இதனையே இன்னும் தெளிவாகத் திருமூலர்,

"மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தின் மறைந்தது மாமத யானை



பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
பரத்தின் மறைந்தது பார்முதற் பூதமே"
—தமிழ் மூவாயிரம் - சுப்பிரம் - 2251

என்று கூறியது காண்க.

அவர்கள் எல்லாம் அவ்வாறு கூறியது எற்றுக்கெனின் உண்மை வழிபாட்டு முறை தெரியாது உருவவழிபாடு செய்யும் மாந்தரைக் குறித்தே ஆகும்.

"திருக்கோயில் உள்ளிருக்கும் திருமேனி தன்னைச்
சிவனெனவே கண்டவர்க்குச் சிவன்உறைவன் அங்கே
உருக்கோலி மந்திரத்தால் எனநினையு மவர்க்கும்
உளனெங்கு மிலனிங்கும் உளன்என் பார்க்கும்
விருப்பாய வடிவாகி இந்தனத்தின் எரிபோன்
மந்திரத்தில் வந்துதித்து மிகுஞ்சுரபிக் கெங்கும்
உருக்காண வொண்ணாத பான்முலைப்பால் விம்மி
ஒழுகுவது போல்வெளிப்பட் டருளுவன்அன் பர்க்கே"

என்று அருணந்திசிவம் உருவ வழிபாட்டு முறையைத் தெளிவுபடுத்தியுள்ளதைக் காண்மின்கள்.

இன்னும் இதனை ஒரு உதாரணமுகத்தால் விளக்கலாம். புத்தகம் ஒரு கோயில்போன்றது. அதற்கு நல்ல கட்டடம் கட்டி, அழகாகப் பீதாம்பரத்தில் வைத்து, பீடத்தின்பேரில் வைத்துக் காலையும் மாலையும் ஓதுதல் வேண்டும். ஓதுவதன் முன்னம் அறிவுக்கறிவாகி இருக்கும் சிவனை வழிபட்டு ஓதுதல் வேண்டும். ஓதினபின் ஓதினபடி நடக்க முயற்சி செய்ய வேண்டும் என்பது முறை.

"கற்கக் கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக"

என்பது தமிழ் வேதம்.

இவ்வாறு ஓதி, ஓதியபடி ஒழுகினல் அறிவு வளரும், மாயை மறையும், மயக்கம் ஒழியும். அதனை விட்டு, அப் புத்தகக் கோயிலினுள் உள்ள பொருள்களைப் படித்து அறிந்துகொள்ளாமல், அப் புத்தகவழிபாட்டிலேயே ஈடுபட்டிருந்தால் அப் புத்தகமும் நைந்துபோய், வழிபடுவோனும்

அறிவு விளக்கம் பெறுதவன் ஆவான். அதுபோல், கோயில் வழிபாடும் உடற் றத்துவங்களை அறிந்துகொள்ளும் வழி பாடாக இருக்கவேண்டுமேயொழிய, கேவலம் உலகர் மெச் சும் உள்ளீடில்லா ஆடம்பர வழிபாடாக இருக்கக் கூடாது என்பதற்காகவே ஞானிகள் எல்லாம் அவ்வாறு கூறியுள் ளார்கள் என்று கொள்க. இக்கொள்கையை வற்புறுத்தவே,

"வாசியும் ஊசியும் பேசி வகையினல்
பேசி இருந்து பிதற்றிப் பயனில்லை
ஆசையும் அன்பும் அறுமின் அறுத்தபின்
ஈசன் இருந்த இடம்எளி தாமே"

—தமிழ் மூவாயிரம் - சுப்பிரம் - 2568

என்று திருமூலரும்,

"குறிக ளும்அடை யாளமும் கோயிலும்
நெறிகளும் அவர் நின்றதோர் நேர்மையும்
அறிய ஆயிரம் ஆரணம் ஓதிலும்
பொறியிலீர் மனம் என்கொல் புகாததே"

என்று அப்பர்சுவாமிகளும் இரங்கிக் கூறியுள்ளதை நோக்கு மின்கள். ஆதலின், அறிஞர்களும், ஞானிகளும், சித்தர் களும், சமய ஆசாரிய சுவாமிகளும் கூறும் உண்மைப் பொருள் உணர்ந்து,

"செம்மலர் நோன்றாள் சேர லொட்டா
அம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரன்எனத் தொழுமே"

என்ற சிவஞானபோத இறுதிச் சூத்திரத்தைக் கடைப் பிடித்து ஒழுகல் அறிவுடை மாந்தர் கடனும். அவர்கள் எல்லாம் இவ்வுண்மையைப் பிறருக்கும் எடுத்துக் கூறி அவர்களைத் தம்வழிப்படுத்த முயலலும் கடனும்.

## 16. முடிவு

இதுகாறும் கூறியவாற்றான் கோயில்களானவை உடற் றத்துவங்களைத் தெள்ளத் தெளிய புறத்தே காட்டும் படம் எனவும், அதனால் அதற்குப் 'படமாடுங் கோயில்' என்று பெயர் அமைந்தது எனவும், படியாதவர்களும் நேரே பார்த்து அறிந்துகொள்ளும் முறையில் அக்கோயில்கள் அமைக்கப்பட்டுள்ளன என்றும், அப் படமாடுங் கோயில் களை நல்ல நிலையில் வைத்து, அந்நன்னிலைமை ஏற்படக்கூடிய பூசைகள் முதலியன சரிவர நடக்கத் திட்டம் செய்து வாழ் வதே அறிவுடையார் செயல் என்றும். சரியா வான்கள், கிரியாவான்கள், யோகிகள், ஞானிகள் எல்லோருக்கும் அப் படமாடுங் கோயில் அவசியம் என்றும், தேகத்தில் குண்ட லினி சத்தி மூலாதாரத்தில் அடங்கிக் கிடத்தல்போல, எங் கும் பரந்து கிடக்கும் அகண்டாகார சிவபோக சத்தி சுயம் புத் தலங்களில் இயற்கையாகவே இலிங்கத்திடத்து அமைந் தும், பிரதிட்டைத் தலங்களில் பெரியோர்களால் இலிங்கத் திடத்து அச் சத்தி அடக்கப்பட்டும், சிவலிங்க வழிபாடு செய்பவர்கள் மனப் பக்குவத்துக்குத் தக்கபடி அச் சிவ சத்தியால் அருள் பெறவும் ஏற்பாடு செய்துள்ளார்கள் என் றும் அறிந்தாம்.

ஆதலின், ஆலயமானது தன்னையறிய வழிகாட்டியாய் உள்ளது. இதனை,

"தன்னை யறியத் தனக்கொரு கேடில்லை
தன்னை யறியாமல் தானே கெடுகின்றான்
தன்னை யறியும் அறிவை அறிந்தபின்
தன்னையே அர்ச்சிக்கத் தானிருந் தானே"

என்ற திருமூலர் வாக்கைக் கடைப்பிடிக்க. இதைப் படிக் கும் அன்பர்கள் திருவருளுக்கு உரியவர்கள் ஆகுக.

---

9. ஒழிபு

# சைவத்தேர்வு வினுக்கள்

## சைவப் புலவர் தேர்வு

டிசம்பர் – 1949

எண் 100] **இலக்கியம்** [நேரம் 3 மணி

கேள்விகளுக்கு மதிப்பெண் சமம்

1. திருக்குறள் சைவம்தழுவிய நூல் என்பதற்கு, அந்நூல் கொண்டே ஆதாரம் காட்டி விளக்குக.

2. அந்தணர், இல்வாழ்வான், ஒப்புரவு, வேளாண்மை, அறம் இவற்றிற்கு வள்ளுவர் விளக்கவந்த பொருள்கள் யாவை ?

3. முயல்வார் என்பார் யார் ? அவரினும் தலையாயவர் யார் என்று வள்ளுவர் கூறுகின்றார் ?

4. அன்பின் வழியது உயிர்நிலை - ஏன் ?

5. வள்ளுவர் ஒழுக்கமுடைமையை வலியுறுத்தி அவ்வொழுக்கங்களைத் தொகுத்து உடன் கூறுகின்றார். அவ்வொழுக்கங்கள் யாவை ?

6. வாழ்வொடு பிணைக்கும் அறம் உரைப்பது திருக்குறள் என்பதைக் காமத்துப்பால் கண்கொண்டு ஆராய்க.

7. 'கண்டுகேட்டு உண்டுஉயிர்த்து உற்றறியும் ஐம்புல
ஒண்டொடி கண்ணே உள.' [னும்

'பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை
தன்நோய்க்குத் தானே மருந்து.'—இவை இரண்டும் அரிவையின் கூடலுக்கும், ஆண்டவன் கூடலுக்கும் பொருந்தும் என்பதை விளக்குக.

8. கனவும் நனவும் காதலர்மாட்டு எவ்வாறு கழிகின்றன ?

9. 'உணலினும் உண்டது அறல்இனிது காமம்
புணர்தலினும் ஊடல் இனிது'—இக்கூற்று காதல் வாழ்வினுக்கு நல்உடல் உரம்தேவை என்பதைக் காட்டுவதனைத் தெளிவாக்குக.

10. இறைவன் திருஉருவத் தோற்றத்தினை விளக்க வரும் மூவர் பாடல்கள் யாவை? அவற்றுள் ஒருவர் கூறும் கருத்தை எழுதுக.

11. 'ஐம்புல னுலா மந்தக் கரண
முக்குண மிருவளி யொருங்கிய லானே
ரேத்த நிந்தனை'—இதற்கு விளக்கம் தருக.

12. திருக்கயிலாயப் பதிகத்தே அப்பர் விளக்கிய இறைவன் தன்மைகளை ஆராய்க.

13. 'யாமார்க்கும் குடியல்லோம் யாதுமஞ்சோம்' என்று அஞ்சாநிலையில் ஆண்டவனைப் போற்றி அடியருடன் இன்ப வெள்ளத்துள் மூழ்கிய பெரியார் யார்? அவர், தம் அஞ்சா நிலையை எவ்வாறு பெற்றார்?

14. துணையற்ற நெஞ்சை நோக்கி மணிவாசகர் அறிவுறுத்துவன யாவை? அவற்றால் பெறுவது யாது?

15. திருச்சதகத்தே மணிவாசகர் உலக நிலையை எவ்வெவ்வாறு விளக்குகிறார்?

16. அப்பர் சைவம் விட்டுச் சமணம் சேர்ந்ததற்கு அடிப்படைக் காரணங்கள் யாவை?

17. சேக்கிழார் அப்பர் அடிகளைப் போற்றும் நெறியில் இரண்டு காட்டி விளக்குக.

18. அரசு பணிசெய்ய, அவர் நன்னிலைமை காட்டுவாராகி, நம்பர் திருப்புகலூரில் செய்த சோதனைகள் யாவை? அவற்றை வென்ற வகை யாது?

19. சைவமாம் சமயம் சார்ந்த அப்பரைச் சமணர் எவ்வெவ்வகையில் மடக்கப் பார்த்தனர்? அவற்றின் முடிபு என்ன?

20. 'இன்றைய உலகம் உய்ய சைவ சமய அடிப்படைக் கொள்கைகள் மக்கள் வாழ்வில் மலரவேண்டும்.' ஓர் ஆய்வுக் கட்டுரை எழுதுக.

## சைவப் புலவர் தேர்வு

டிசம்பர் - 1949

எண் 100] **சாத்திரம்** [நேரம் 3 மணி

கேள்விகளுக்கு மதிப்பெண் சமம்

1. 'சிவஞான போதம் பத்தாம் சூத்திரம் சின் முத்திரையின் விளக்கம்' இதுபற்றி விளக்கம் தருக.

2. 'சிவஞான போதம் முதற் சூத்திரம் உள்ளது சிறத்தலை (Evolution) அடிப்படையாகக் கொண்டுள்ளது' ஆராய்க.

3. ஆன்ம இயல்பினை மெய்கண்டார் மூன்றும் சூத்திரத்தான் எவ்வாறு விளக்குகின்றார் ? ஆராய்க.

4. ஞானத்தினை உணரும் முறைமை யாது ? அது விளக்கவரும் சூத்திரம் யாது ?

5. 'இரண்டு வகையின் இசைக்குமுன் உலகு' இரண்டு வகையாவன யாது ? விளக்கமாக ஆராய்க.

6. 'சிவஞான சித்தியார் வழிநூல்' எதற்கு ? இது முதல் நூலொடு எவ்வெவ்வாறு பொருந்துகின்றது என்பதைக் காட்டுக.

7. சித்தியாரின் பகுதிகளையும், ஒவ்வொன்றும் விளக்கவரும் பொருள்களையும் தொகுத்து எழுதுக.

8. சிவசக்தியின் செயலை ஆசிரியர் எவ்வெவ்வாறு விளக்குகின்றார் ?

9. 'அருவமோ உருவாரூப மானதோ அன்றிநின்ற உருவமோ உரைக்கும் கர்த்தா வடிவு எனக்கு உணர்த்து' என்ற வேண்டுகோளுக்கு வரும்விடையினை விளக்கி எழுதுக.

10. உயிரினைப் பிறமதத்தவர் எவ்வெவ்வாறு இயக்குமெனக் கூறுகின்றனர். அவற்றை எவ்வெவ்வாறு சித்தியார் மறுக்கின்றது ?

11. 'நின்றதுயாது ஒருசமயம் அதுசமயம்' என அறுதியிட்டு ஆசிரியர் கூறும் சமயம் யாது ?

12. 'இருள்சேர் இருவினை' என்ற வள்ளுவன் வாக்கினையும், 'எங்கெழிலென் ஞாயிறு' என்ற மணிமொழியினையும் மனத்துட்கொண்டு சித்தியார் ஆசிரியர் இன்ப நெறி செல்லும் உயர்நிலையை எவ்வாறு விளக்குகின்றார் ?

13. பதி இலக்கணத்தை சிவப்பிரகாசம் விளக்குமாற்றை ஆராய்க.

14. அந்தம் ஆதிகள் இலாத ஐஞ்செழுத்து அருள் நிலை யாது ?

15. உமாபதி சிவனார் தம் ஞானசிரியரிடம் கொண்ட பக்தி நிலையை வெளியிடும் இடங்களில் இரண்டு காட்டி விளக்குக.

16. 'அஞ்செழுத்தும் எட்டெழுத்தும் ஆறெழுத்தும்
நாலெழுத்தும், பிஞ்செழுத்தும் மேலைப்பெரு
வெழுத்தும் — நெஞ்சழுத்திப், பேசும் எழுத்
துடனே பேசா எழுத்தினையும், கூசாமற் காட்டக்
கொடி' இதனை விளக்கம் தந்து ஆராய்க.

17. 'திண்டாடும் பல்கருவி, வாரில் அகப்பட்டு மயங்கினேன்' அவர்கள் அகப்பட்டு மயங்கிய வாரிகள் எவை ? எத்தன்மையன ?

18. இறைவனைக் காணுமிடம் இது என விளக்க வருகின்ற ஆசிரியர் நெஞ்சினை எவ்வெவ்விடங்களுக்குச் செல்லலாகாது என எச்சரிக்கிறார் ?

19. உமாபதி சிவனால் யாராருடைய சங்கற்பங்கள் நிராகரிக்கப்படுகின்றன ? அவற்றுள் ஒன்றினை விளக்கி எழுதுக.

20. சித்தாந்த சமயம் வாழ்வின் தேவையைப் பூர்த்தி செய்யும் என்பதைச் சாத்திரங்களின் ஏதுக்கள் காட்டி விளக்குக.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகாசமாஜத்தின்

மாதத் தமிழ் பத்திரிகை

மலர் இருபத்திரண்டு

1949

பத்திராசிரியர் :

திரு. C. M. இராமச்சந்திரன் செட்டியார், பி. ஏ., பி. எல்.

உதவிப் பத்திராசிரியர்

திரு. R. சண்முகசுந்தரம் செட்டியார்

சைவ சித்தாந்த மகாசமாஜம்

40, முத்தையா முதலி தெரு,

வேளாள தேனும்பேட்டை, சென்னை.

# உள்ளுறை

பொருள் | பக்கம்

---

சாது அச்சுக்கூடம், இராயப்பேட்டை சென்னை

1949ஆம் டிசம்பர்மீ 31உக்குள் சமாஜக் காரியதரிசிக்கு அனுப்பி உபகரிக்க விரும்புகிறேம்.

7. குறித்தபடி மணியார்டர் செய்து அடுத்த ஆண்டுக்குச் சமாஜ அங்கம் வகித்துப் பத்திரிகைபெற விரும்பாமலோ, அல்லது முடியாமலோ இருப்போர், தயைகூர்ந்து முக்காலணு கார்டு மூலம் நமக்கு அறிவித்து விட்டால் சமாஜத்துக்குப் பொருள் நஷ்டமும் கஷ்டமும் விளையா. பத்திரிகை பெற விரும்பாதாரும், இயலாதாரும் தயை செய்து தெரிவித்தலாகிய உபகாரத்தை யேனுஞ் செய்வார்களாக.

8. ஒவ்வொரு சந்தாதாரரும் தமது திருத்தமான தபால் விலாசத்தைச் செவ்வையாக எழுதி உடனே அனுப்ப விரும்புகிறேன்.

இங்ஙனம் :

செயலாளர்.

## அங்கத்தவர் பொதுக்கூட்டம்

சமாஜத்தின் நாற்பத்து நான்காம் ஆண்டு வரவு செலவை அங்கீகரிக்க அங்கத்தவர் பொதுக்கூட்டம் இராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்த ஜனசபையில் 1949 டிசம்பர் 24-ம் நாள் சனிக்கிழமை மாலை 6 மணிக்குக் கூடும். அதுபோது கூட்டத்துக்கு வேண்டிய அங்கத்தவர் நிறைவெண் (Quorum) இல்லாவிடில் டை விஷயத்தைக் கவனிக்க டை இடத்திலேயே 1949 டிசம்பர் 25-ம் நாள் ஞாயிறு மாலை 7 மணிக்கு. சமாஜ விதிகளின் படி வருபவர்களைக் கொண்டு அக்கூட்டம் நடைபெறும்.



## கொழும்பு மகாநாடு

கொழும்பு மகாநாட்டுக்கு வர விண்ணப்பித்தவர்களுள் அனுமதிக்கப்பட்டவர்களுக்கு பாஸ் வாங்குவதற்கு மனுபாரம் அனுப்பப்பட்டிருக்கிறது. அதைப் பூர்த்தி செய்துஇரண்டு (3" × 2") புகைப்படங்களுடன் (Photos) ஒரு மாஜிஸ்ட்டிரேட்டிடம் கை யொப்பம் வாங்கி, சென்னை சமாச அலுவலகத்திற்கு டிசம்பர் 20ம் தேதிக்குள் அனுப்பிவிட வேண்டும். அத்துடன் ஒவ்வொருவரும் ரூபா இரண்டு மணியார்டர் மூலம் அலுவலகத்துக்கு அனுப்பிவிட வேண்டும். 1950 ஜனவரி 4 ம் தேதி புதன்கிழமை காலை 10-40, மணிக்கு எழும்பூரில். புறப்படும் தனுஷ்கோடி பாசஞ்சரில் புறப்பட்டு மண்டபம் காம்புக்கு 5 ம் தேதி காலை வந்து சேர வேண்டும். மற்ற விவரங்கள் பின்னர் தெரிவிக்கப்படும்.

Printed at the Sadhu Press, 15, Ganapathi Mudali Street, Royapettah by V. Rajammal, (P. I. Card No. M. S. 115) Edited and Published by C. M. Ramachandran Chettiar, B.A., B.L., for the Saiva Siddhanta Maha Samajam, at 40, Muthiah Mudali Street VellalaTeynampet, Madras-6, P. I. Card No. M. S. 81.